- இல் என்னும் உருபு ஐந்தாம் வேற்றுமையிலும் ஏழாம் வேற்றுமையிலும் உண்டு. நீங்கல் பொருளில் வந்தால் ஐந்தாம் வேற்றுமை என்றும் இடப் பொருளில் வந்தால் ஏழாம் வேற்றுமை என்றும் கொள்ள வேண்டும்.
- தமிழ்நாட்டின் மாநில மரம் – பனை
- கல்மூங்கில்,மலைமூங்கில்,கூட்டுமூங்கில் என மூன்றுவகை மூங்கில்கள் உண்டு.
- கூட்டு மூங்கில்களே கைவினைப் பொருள்கள் செய்வதற்கு ஏற்றவை.
- பிரம்பு என்பது கொடிவகையை சேர்ந்த தாவரம்
- பிரம்பு தாவரவியல் பெயர் – கலாமஸ் ரொடாங்
- ஒன்றுக்கு மேற்பட்ட சொற்களில் உம் என்னும் உருபு வெளிப்பட வருவது எண்ணும்மை எனப்படும். எ.கா – இரவும் பகலும்
- தூத்துக்குடி - முத்துநகரம்
- சிவகாசி - குட்டி ஜப்பான்
- மதுரை - தூங்கா நகரம்
- திருவண்ணாமலை – தீப நகரம்
- கல்வெட்டுகளில் உள்ள எழுத்துக்களின் அமைப்பு
    - ஸ எனும் வட எழுத்து காணப்படுகிறது
    - மெய்யைக் குறிக்கப் புள்ளி பயன்படுவதில்லை
    - எகர,ஒகரக் குறில் நெடில் வேறுபாடில்லை
- தமிழ் மொழியை எழுத இருவகை எழுத்துகள் வழக்கிலிருந்தன என அறிகிறோம். அரச்சலூர் கல்வெட்டே இதற்கு சான்றாகும். இக்கல்வெட்டில் தமிழ் எழுத்தும் வட்டெழுத்தும் கலந்து எழுதப்பட்டுள்ளன.
- பரம்பிகுளம் , ஆனைமலைப் பகுதிகளில் காடர்கள் வசிக்கும் சிற்றூர்கள் பல உள்ளன.
- காடர்கள் மிகச் சிறிய பழங்குடி சமுதாயத்தினர். தாங்கள் பேசும் மொழியை ஆல்அலப்பு என்று அழைக்கின்றனர்.அவர்களின் வாழ்க்கைமுறை பற்றிய எழுத்துக் குறிப்புகள் ஏதும் அவர்களிடம் இல்லை.
- விதித்தல் பொருளில் வரும் வியங்கோள் வினைமுற்று ,தன்மை இடத்தில் வராது.
- இயர்,அல்,ஆகிய இரண்டு விகுதிகள் தற்கால வழக்கில் இல்லை. செய்யுள் வழக்கில் மட்டுமே உள்ளன.
- பேசப்படுவதும் கேட்கப்படுவதுமே உண்மையான மொழி: எழுதப்படுவதும் படிக்கப்படுவதும் அடுத்தநிலையில் வைத்துக் கருதப்படும் மொழியாகும்.இவையே அன்றி வேறுவகை மொழிநிலைகளும் உண்டு.எண்ணப்படுவது, நினைக்கப்படுவது,கனவு காணப்படுவது ஆகியவையும் மொழியே ஆகும் -
  மு.வரதராசனார்

- பேச்சு மொழிக்கும் எழுத்து மொழிக்கும் இடையே பெரிய அளவில் வேறுபாடு இருந்தால் அஃது இரட்டை வழக்கு மொழி எனப்படும்.
- தமிழில் பழங்காலம் முதலே பேச்சு மொழிக்கும் எழுத்து மொழிக்கும் இடையே வேறுபாடு இருந்துள்ளது. தொல்காப்பியர் இவற்றை உலக வழக்கு,செய்யுள் வழக்கு என்று கூறியுள்ளார்.
- தமிழில் எழுத்துகளைக் குறிப்பிடுவதற்கு கரம்,கான்,காரம்,கேனம் ஆகிய அசைச் சொற்களை பயன்படுத்துகிறோம்.
- குறில் எழுத்துகளைக் குறிக்க கரம் - எ.கா -அகரம்,மகரம்
- நெடில் எழுத்துகளைக் குறிக்க கான் - எ.கா -ஐகான்,ஔகான்
- குறில்,நெடில் எழுத்துகளைக் குறிக்க காரம் -எ.கா -ஏகாரம்,மகாரம்
- ஆய்த எழுத்தைக் குறிக்க கேனம் - எ.கா – அஃகேனம்
- வ் என்னும் எழுத்தை தொடர்ந்து வரும் குற்றியலுகரச் சொற்கள் இல்லை
- மேலும் சு,டு,று ஆகியவை இறுதியாக அமையும் இடைத்தொடர் குற்றியலுகரச் சொற்களும் இல்லை.
- காட்டை குறிக்கும் வேறு பெயர்கள்
  - கா,கால்,கான்,கானகம்,அடவி,அரண்,ஆரணி,புரவு,பொற்றை, பொழில்,தில்லம்,அழுவம்,இயவு,பழவம்,முளரி,வல்லை, விடர்,வியல்,வனம்,முதை,மிளை,இறும்பு,சுரம்,பொச்சை, பொதி,முளி,அரில்,அறல்,பதுக்கை,கணையம்.
- தமிழ்நாட்டில் வனக்கல்லூரி அமைந்துள்ள இடம் -மேட்டுப்பாளையம்-கோவை
- 2012 ஆம் ஆண்டு ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகம் ஜாதவுக்கு இந்திய வனமகன் என்னும் பட்டம் வழங்கியுள்ளது.
- 2015 ஆம் ஆண்டு இந்திய அரசு பத்மஸ்ரீ விருதை(ஜாதவ்) வழங்கியுள்ளது.
- கௌகாத்தி பல்கலைக்கழகம் மதிப்புறு முனைவர் பட்டம் வழங்கியுள்ளது.
- பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அஞ்சல் தலை – 1995
- முத்துராமலிங்கத்தேவரின் சிறப்புப் பெயர்கள் – தேசியம் காத்த செம்மல், வித்யா பாஸ்கர், பிரவசன கேசரி, சன்மார்க்க சண்டமாருதம், இந்து புத்தசமய மேதை
- முத்துராமலிங்கத் தேவர் இந்த மண்ணுலகில் வாழ்ந்த நாட்கள் 20075, சுதந்திர போராட்டத்திற்காக சிறையில் கழித்த நாட்கள் 4000.தனது வாழ்நாளில் 1/5 சிறையில் கழித்த தியாக செம்மல்
- சிதம்பரனாரின் பிரசங்கத்தையும்,பாரதியாரின் பாட்டையும் கேட்டால் செத்த பிணம் உயிர்பெற்று எழும்.புரட்சி ஓங்கும்.அடிமைப்பட்ட நாடு ஐந்தே நிமிடங்களில் விடுதலை பெறும் - சிதம்பரனாருக்கு இரட்டை வாழ்நாள் சிறைத்தண்டனை வழங்கிய நீதிபதி பின்ஹேவின் கூற்று.
- இல்லத்துக்குள் நுழையும் வழி இல்வாய்(இல்லத்தின் வாய்) எனக் குறிப்பிடப்பட வேண்டும். ஆனால் அதனை வாயில் என வழங்குகிறோம். இது இலக்கணப் போலியாகும்.

- வாயில் என்னும் சொல்லை பேச்சு வழக்கில் வாசல் என வழங்குகிறோம். இது மருஉ ஆகும்.
- நாகரிகம் கருதி மறைமுகமாகக் குறிப்பிடுதல் இடக்கரடக்கல்
- மங்கலமற்ற சொற்களை மாற்றி மங்கலச் சொற்களால் குறிப்பிடுதல் மங்கலம்.
- பிறர் அறியாமல் ஒரு குழுவுக்கு மட்டும் புரியும் வகையில் குறிப்பிடுதல் குழூஉக்குறி
- நியூசிலாந்து நாட்டு வெலிங்டன் அருங்காட்சியகத்தில் பழங்காலத் தமிழ்நாட்டுக் கப்பல்களில் பயன்படுத்தப்பட்ட மணி ஒன்று இடம் பெற்றுள்ளது.தமிழர்கள் அயல் நாடுகளுக்கு கப்பல்களில் சென்றனர் என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.பிற்காலச் சோழர்களில் இராசராச சோழனும், இராசேந்திர சோழனும், இராசேந்திர சோழனும் பெரிய கப்பற்படையைக் கொண்டு பல நாடுகளை வென்றனர் என்பதை வரலாறு பகர்கிறது.
- ஆங்கிலேயர் கட்டிய கப்பல்களைப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பழுது பார்க்க வேண்டும்.ஆனால் தமிழர் கட்டிய கப்பல்களை ஐம்பது ஆண்டுகள் ஆனாலும் பழுது பார்க்க வேண்டிய அவசியமில்லை என்று வாக்கர் என்னும் ஆங்கிலேயர் கூறியுள்ளார்.
- ஓரெழுத்து ஒரு மொழிகளும் அவற்றின் பொருளும

ஆ – பசு
ஈ - கொடு
ஊ - இறைச்சி
ஏ - அம்பு
ஐ - தலைவன்
ஓ - மதகுநீர் தாங்கும் பலகை
கா - சோலை
கூ - பூமி
கை - ஒழுக்கம்
கோ - அரசன்
சா - இறந்துபோ
சீ - இகழ்ச்சி
சே - உயர்வு
சோ - மதில்
தா - கொடு
தீ - நெருப்பு
தூ - தூய்மை
தே - கடவுள்
தை - தைத்தல்
நா - நாவு
நீ - முன்னிலை ஒருமை
நே - அன்பு
நை - இழிவு
நோ - வறுமை

பா - பாடல்
பூ - மலர்
பே - மேகம்
பை - இளமை
பொ - செல்
மா - மாமரம்
மீ - வான்
மூ - மூப்பு
மே - அன்பு
மை - அஞ்சனம்
மோ - முகத்தல்
யா - அகலம்
வா - அழைத்தல்
வீ - மலர்
வை - புல்
வௌ - கவர்
நொ - நோய்
து - உண்

- புனையா ஓவியம் கடுப்பப் புனைவில் - நெடுநல்வாடை
- புனையா ஓவியம் புறம் போநந்தன்ன - மணிமேகலை
- இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்

துன்னுநர் சுட்டவும் சுட்டு அறிவுறுத்தவும் - பரிபாடல்

வேறுப்பெயர்கள்

ஓவியம் -

ஓவு, ஓவியம், ஓவம், சித்திரம், படம், படாம், வட்டிகைச்செய்தி

ஓவியம் வரைபவர் -

கண்ணுள் வினைஞர், ஓவியப் புலவர், ஓவமாக்கள், கிளவி வல்லோன், சித்திரக்காரர், வித்தகர்

ஓவியக் கூடம் -

எழுதெழில் அம்பலம், எழுத்துநிலை மண்டபம், சித்திர அம்பலம்,

சித்திரக்கூடம், சித்திரமாடம், சித்திரமண்டபம், சித்திர சபை

- ஐரோப்பியக் கலை நுணுக்கத்துடன் இந்தியக் கதை மரபுகளை இணைத்து ஓவியங்களில் பதுமைகளைப் புகுத்தியவர் இராஜா இரவிவர்மா. இவரது பாணி ஓவியங்கள் பிற்காலத்தில் நாட்காட்டிகளில் அதிகம் பயன்படுத்தப்பட்டன. நாட்காட்டி ஓவியம் வரையும் முறையின் முன்னோடிகளுள் ஒருவராகக் கருதப்படுபவர் கொண்டையராஜூ. நாட்காட்டி ஓவியங்களை பசார் பெயிண்டிங் என்று அழைப்பர்
- நெல்தாளில் எஞ்சியிருக்கும் நெல்மணிகளைப் பிரிப்பதற்காக மாடுகளை கொண்டு மிதிக்க செய்வர். இதற்கு போரடித்தல் என்று பெயர்.

- முற்காலத்தில் திருநெல்வேலிக்கு வேணுவனம் என்று பெயர்
- வேணுவனம் என்றால் மூங்கில் காடு
- ஆதிச்சநல்லூர் - தூத்துக்குடி மாவட்டம்
- இரட்டை நகரம் – திருநெல்வேலி,பாளையங்கோட்டை
- தென்னிந்தியாவின் ஆக்ஸ்போர்டு – பாளையங்கோட்டை
- ஒரு பாடலின் இறுதி எழுத்தோ அசையோ,சொல்லோ அடுத்து வரும் பாடலுக்கு முதலாக அமைவதை அந்தாதி என்பர்.(அந்தம்-முடிவு,ஆதி-முதல்)
- திருமாலைப் போற்றிப் பாடியவர்கள் பன்னிரு ஆழ்வார்கள்.அவர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பு நாலாயிரத் திவ்விய பிரபந்தம் ஆகும். இதனை தொகுத்தவர் நாதமுனி. பன்னிரு ஆழ்வார்களுள் பொய்கையாழ்வார்,பூதத்தாழ்வார்,பேயாழ்வார் ஆகிய மூவரையும் முதலாழ்வார்கள் என்பர்.
- தமிழக அரசியல் வானில் கவ்வியிருந்த
  காரிருளை அகற்ற வந்த ஒளிக்கதிராக
  காயிதே மில்லத் முகமது இஸ்மாயில்
  அவர்கள் திகழ்கிறார். - அண்ணா
- இப்படிப்பட்ட தலைவர் கிடைப்பது அரிது
  அவர் நல்ல உத்தமமான மனிதர் - பெரியார்
- சிறகடிக்காமல் கடலையும் தாண்டிப் பறக்கும் பறவை கப்பல் பறவை. இது தரையிறங்காமல் 400 கிலோ மீட்டர் வரை பறக்கும். இது கப்பல் கூழைக்கடா,கடற்கொள்ளைப் பறவை என்றும் அழைக்கப்படுகிறது.
- இந்தியாவின் பறவை மனிதர் - டாக்டர் சலீம் அலி
- டாக்டர் சலீம் அலி அவர்களின் வாழ்க்கை வரலாற்றுக்கு நூல்-சிட்டுக்குருவியின் வீழ்ச்சி
- உலகிலேயே நெடுந்தொலைவு 22,000 கி.மீ பயணம் செய்யும் பறவை - ஆர்டிக் ஆலா
- பறவை பற்றிய படிப்பு ஆர்னித்தாலஜி
- உலக சீட்டுக்குருவி நாள் - மார்ச் 20
- காமராசரின் சிறப்புப் பெயர்கள்
  பெருந்தலைவர்,கறுப்புக் காந்தி,படிக்காத மேதை,ஏழைப்பங்காளர்,
  கர்மவீரர்,தலைவர்களை உருவாக்குபவர்.
- மதுரை பல்கலைக்கழகம் - காமராசர் பல்கலைக்கழகம்
- காமராசர் பாரதரத்னா – 1976
- சென்னை உள்நாட்டு விமான நிலையம் – காமராசர் பெயர்
- காமராசர் மணிமண்டபம் - கன்னியாகுமரி
- ஆசியாவிலே மிகப் பெரிய நூலகம் - சீனா
- சிறந்த நூலகர்களுக்கு - எஸ்.ஆர்.அரங்கநாதன் விருது

- வாழ்க்கைக்கு வளம் தரும் மழைக்கடவுளை வழிபடும் நோக்கில் அக்காலத்தில் போகிப் பண்டிகை இந்திரவிழாவாக கொண்டாடப்பட்டது.
- தை இரண்டாம் நாள் திருவள்ளுவர் தினம்
- தை முதல் நாளில் இருந்து திருவள்ளுவராண்டு தொடங்குகிறது.
- அறுவடை திருநாள் ஆந்திரா,கர்நாடகா,மகாராட்டிரா,உத்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் மகரசங்கராந்தி என்று கொண்டாடப்படுகிறது.
- பஞ்சாப் மாநிலத்தில் லோரி என்று கொண்டாடப்படுகிறது.
- குஜராத்,இராஜஸ்தான் மாநிலங்களில் உத்தராயன் என்று கொண்டாடப்படுகிறது.
- சிற்ப கலை நான்கு வகைப்படும். நான்கு வகைகளும் அமைந்த ஒரே இடம் மாமல்லபுரம்
- ட என்னும் எழுத்துக்கு முன் ண் வரும்
- ற என்னும் எழுத்துக்கு முன் ன் வரும்
- தந்நாடு விளைந்த வெண்ணெல் தந்து
  பிறநாட்டு உப்பின் கொள்ளைச் சுற்றி
  உமணர் போகலும் - நற்றிணை
- பாலொடு வந்து கூழொடு பெயரும் - குறுந்தொகை
- பொன்னொடு வந்து கறியொடு பெயரும்- அகநானூறு
- வேலுநாச்சியாரின் காலம் - *1730 – 1796*
- வேலுநாச்சியார் சிவகங்கையை மீட்ட ஆண்டு- *1780*
- ஜான்சிராணிக்கு முன்பே ஆங்கிலேயரை எதிர்த்து வீரப்போர் புரிந்தவர் வேலு நாச்சியார்.
- வாடிய பயிரை கண்ட போதெல்லாம் வாடினேன் - வள்ளலார்
- வாழ்க்கை என்பது நீ சாகும் வரை அல்ல
  மற்றவர் மனதில் நீ வாழும் வரை - அன்னை தெரசா
- குழந்தைகளைத் தொழிலாளர்களாக மாற்றுவது மனித தன்மைக்கு எதிரான குற்றம். உலகத்தைக் குழந்தைகளின் கண் கொண்டு பாருங்கள். உலகம் அழகானது - கைலாஷ் சத்யார்த்தி

# 9th to 10th உங்களுக்கு தெரியுமா?

## தெரிந்து தெளிவோம்... உங்களுக்கு தெரியுமா...

- தமிழ் வடமொழியின் மகளன்று, அது தனிக் குடும்பத்திற்கு உரியமொழி; சமஸ்கிருதக் கலப்பின்றி அது தனித்தியங்கும் ஆற்றல் பெற்ற மொழி; தமிழுக்கும் இந்தியாவின் பிற மொழிகளுக்கும் தொடர்பு இருக்கலாம் - கால்டுவெல்
- மொரிசியஸ், இலங்கை உள்ளிட்ட நாடுகளின் பணத்தாள்களில் தமிழ்மொழி இடம்பெற்றுள்ளது.
- இனிமையும் நீர்மையும் தமிழெனல் ஆகும் – பிங்கல நிகண்டு
- யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம் - பாரதியார்
- உலகத் தாய்மொழி நாள் - பிப்ரவரி 21
- தமிழை ஆட்சி மொழியாக கொண்ட நாடுகள் - இலங்கை, சிங்கப்பூர்
- கண்ணி - தமிழில் இரண்டிரண்டு அடிகள் கொண்ட எதுகையால் தொடுக்கப்படும் செய்யுள் வகை
- செய்பவரை முதன்மைப்படுத்தும் வினை செய்வினை
- செயப்படுபொருளை முதன்மைப்படுத்தும் வினை செயப்பாட்டு வினை
- அகழி, ஆழிக்கிணறு, உறைக்கிணறு, அணை, ஏரி, குளம், ஊருணி, கண்மாய், கேணி - எனப் பல்வேறு பெயர்களில் நீர்நிலைகள் உள்ளன
- இந்திய நீர்ப் பாசனத்தின் தந்தை - சர் ஆர்தர் காட்டன்
- கிராண்ட் அணைக்கட்டு - கல்லணை
- அகழி - கோட்டையின் புறத்தே அகழ்ந்தமைக்கப்பட்ட நீர் அரண்
- அருவி - மலைமுகட்டுத் தேக்கநீர் குத்திட்டு குதிப்பது.
- ஆழிக்கிணறு - கடலருகே தோண்டிக் கட்டிய கிணறு
- ஆறு - இரு கரைகளுக்கிடையே ஓடும் நீர்ப்பரப்பு
- இலஞ்சி - பலவகைக்கும் பயன்படும் நீர்த்தேக்கம்
- உறைக்கிணறு - மணற்பாங்கான இடத்தில் தோண்டி சுடுமண் வளையமிட்ட கிணறு
- ஊருணி - மக்கள் பருகுநீர் உள்ள நீர்நிலை
- ஊற்று - அடியிலிருந்து நீர் ஊறுவது
- ஏரி - வேளாண்மை பாசன நீர் தேக்கம்
- கட்டுக்கிணறு - சரளை நிலத்தில் தோண்டி கல், செங்கற்களால் அகச்சுவர் கட்டிய கிணறு
- கடல் - அலைகளை கொண்ட உப்புநீர் பெரும்பரப்பு
- கண்மாய் - பாண்டி மண்டலத்தில் ஏரிக்கு வழங்கப்படும் பெயர்
- குண்டம் - சிறியதாய் அமைந்த குளிக்கும் நீர்நிலை

- குண்டு - குளிப்பதற்கேற்ற சிறுகுளம்
- குமிழிஊற்று – அடிநிலத்து நீர்,நிலமட்டத்திற்கு கொப்புளித்து வரும் ஊற்று.
- கூவல் - உவர்மண் நிலத்தில் தோண்டப்படும் நீர்நிலை
- கேணி – அகலமும் ஆழமும் உள்ள பெருங்கிணறு
- புனற்குளம் – நீர்வரத்து மடையின்றி மழைநீரையே கொண்டுள்ள குளிக்கும் நீர்நிலை
- பூட்டைக் கிணறு – கமலை நீர்பாய்ச்சும் அமைப்புள்ள கிணறு.
- முல்லை பெரியாறு அணையை கட்டியவர் – ஜான் பென்னி குவிக்
- எகிப்தில் உள்ள பெனி -ஹாசன் சித்திரங்களிலும்,கிரீட் தீவிலுள்ள கினோஸஸ் என்னுமிடத்தில் உள்ள அரண்மனைச் சித்திரங்களிலும் காளைப்போர் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன
- ஐம்பெருங்குழு - அமைச்சர்,சடங்கு செய்விப்போர்,படைத்தலைவர், தூதர்,சாரணர்(ஒற்றர்)
- எண்பேராயம் - கரணத்தியலவர்,கரும விதிகள், கனகச்சுற்றம், கடைக்காப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானை வீரர், இவுளி மறவர்.
- பட்டிமண்டபம் என்பது தான் இலக்கிய வழக்கு.
- மகத நன்நாட்டு வாள்வாய் வேந்தன்,பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண்டபம் - சிலப்பதிகாரம்
- பட்டிமண்டபத்துப் பாங்கு அறிந்து ஏறுமின் - மணிமேகலை
- பட்டிமண்டபம் ஏற்றினை,ஏற்றினை; எட்டினோடு இரண்டும் அறியேனையே - திருவாசகம்
- பன்ன அரும் கலைதெரி பட்டிமண்டபம் - கம்பராமாயணம்
- வையக விரிவு வலை வழங்கியை உருவாக்கியவர் - டிம் பெர்னெர்ஸ் லீ(1990)
- இணையத்தில் இது இல்லையெனில் உலகத்தில் அது நடைபெறவேயில்லை என்பது லீயின் புகழ் பெற்ற கூற்று.
- வலவன் ஏவா வான ஊர்தி - புறநானூறு
- ஓர் எந்திர வூர்திஇ யற்றுமின் - சீவக சிந்தாமணி
- இந்திய விண்வெளித் திட்டத்தின் தந்தை - விக்ரம் சாராபாய்
- விக்ரம் சாராபாய் விண்வெளி மையம் – திருவனந்தபுரம்
- இந்திய ஏவுகணை நாயகன் - அப்துல் கலாம்
- அப்துல்கலாம் விருதை பெற்ற முதல் அறிவியல் அறிஞர் - வளர்மதி
- இஸ்ரோவின் செயற்கைக்கோள் திட்ட இயக்குநராகப் பணியாற்றிய இரண்டாவது பெண் அறிவியல் அறிஞர் -வளர்மதி
- இளைய கலாம் - மயில்சாமி அண்ணாதுரை
- கையருகே நிலா நூல் - மயில்சாமி அண்ணாதுரை
- தமிழகத்தின் முதல் பெண் மருத்துவர் - முத்து லெட்சுமி

- சென்னை மாநகராட்சியின் முதல் துணை மேயர் – முத்துலட்சுமி
- அவ்வை இல்லம்(1930) - அடையாறு
- முத்துலெட்சுமி – 1886 – 1968
- பண்டித ராமாபாய் – 1858 – 1922
- மூவலூர் ராமாமிர்தம் - 1883 – 1962
- திருவண உதவித் தொகை மூவலூர் ராமாமிர்தம் பெயரில் வழங்கி வருகிறது
- பெண்கள் மருத்துவராவதை மருத்துவ உலகமே விரும்பாத காலத்தில், தமிழகத்திற்கு வந்து, மருத்துவராகி வேலூரில் இலவச மருத்துவம் அளித்தவர் – ஐடாஸ் சோபியா ஸ்கட்டர் – 1870 – 1960
- பாகிஸ்தானில் பெண்கல்வி வேண்டுமெனப் போராட்டக் களத்தில் இறங்கிய போது மலாலாவின் வயது 12
- நாட்டின் முதல் பெண் ஆசிரியர் - சாவித்திரிபாய் பூலே
- ஈ.வெ.ரா – நாகம்மை இலவசக் கல்வி உதவித் திட்டம் பட்ட மேற்படிப்பிற்கு உரியது
- சிவகாமி அம்மையார் கல்வி உதவித் திட்டம் – கல்வி, திருமண உதவித் தொகை ஆகியவற்றுடன் தொடர்புடையது
- தனித்தமிழ் கட்டுரை,வடசொல் – தமிழ் அகரவரிசை, முப்பெண்மணிகள் வரலாறு,பட்டினத்தார் பாராட்டிய மூவர் ஆகிய நூல்கள் எழுதியவர் – நீலாம்பிகை அம்மையார்
- மகளிர் கல்வியை வலியுறுத்தியது – கோத்தாரி கல்விக் குழு(1964)
- சாரதா சட்டம் -1929
- சூரியன்,பரமாணுப் புராணம் போன்ற அறிவியல் நூல்களை எழுதியுள்ளார் - ஈ.த இராஜேஸ்வரி அம்மையார்(1906 -1955)
- சிறுபஞ்சமூலத்தின் ஒவ்வொரு பாடலிலும் ஐந்து கருத்துகள் கொண்டு உள்ளது.
- அண்ணா நினைவாக அவர் உருவம் பொறிக்கப்பட்ட 5 ரூபாய் நாணயம் – 2009
- அண்ணா நூற்றாண்டு நூலகம் - 2010
- ஆசியாவிலேயே மிகப் பழமையான நூலகம் – தஞ்சை சரசுவதி மகால் நூலகம்
- உலகளவில் தமிழ் நூல்கள் அதிகமுள்ள நூலகம் – கன்னிமரா நூலகம்(சென்னை)
- இந்தியாவில் தொடங்கப்பட்ட முதல் பொது நூலகம் என்ற பெருமைக்கு உரியது, திருவனந்தபுரம் நடுவண் நூலகம்
- இந்தியாவின் மிகப் பெரிய நூலகம் – கொல்கத்தா(ஆவண காப்பக நூலகம்)
- உலகின் மிகப் பெரிய நூலகம் – லைப்ரரி ஆப் காங்கிரஸ்(ஆமெரிக்கா)
- அன்று என்பது – ஒருமைக்கு உரியது
- அல்ல என்பது – பன்மைக்கு உரியன

- சிற்பச் செந்நூல் என்ற நூலை – தமிழ்நாடு தொழில்நுட்பக்கல்வி இயக்கம் வெளியிட்டுள்ளது.
- இராவண காவியம் காலத்தின் விளைவு.ஆராய்ச்சியின் அறிகுறி. புரட்சிப் பொறி. உண்மையை உணர வைக்கும் உன்னத நூல் - அறிஞர் அண்ணா
- பெண்ணின் திருமண வயது 18, ஆணின் திருமண வயது 21 என்று சட்டம் நிறைவேற்றப்பட்டுள்ளது
- சாகித்திய அகாதெமி விருது பெற்ற தமிழ் சிறுகதை எழுத்தாளர்கள்
    - அன்பளிப்பு – கு.அழகிரிசாமி – 1970
    - சக்தி வைத்தியம் – ஜானகிராமன் – 1979
    - முதலில் இரவு வரும் – ஆதவன் – 1987
    - அப்பாவின் சிநேகிதர் – அசோகமித்ரன் – 1996
    - மின்சாரப்பூ – மேலாண்மை பொன்னுசாமி – 2008
    - சூடிய பூ சூடற்க – நாஞ்சில் நாடன் – 2010
    - ஒரு சிறு இசை – வண்ணதாசன் – 2016
- ஜானகிராமனின் கட்டுரை,நூல்கள்
    - தனது ஜப்பான் பயண அனுபவங்களை உதயசூரியன் என்னும் தலைப்பில் சுதேசமித்திரன் வார இதழில் எழுதினார். இது 1967யில் நூலாக வெளியிடப்பெற்றது.
    - ரோம்,செக்கோஸ்லோவோக்கியா சென்ற அனுபவங்களை கருங்கடலும் கலைக்கடலும் என்னும் தலைப்பில் 1974யில் நூலாக வெளியிட்டார்.
    - தமது காவிரிக்கரை வழியான பயணத்தை நடந்தாய் வாழி காவேரி என்னும் தலைப்பில் நூலாக வெளியிட்டுள்ளார்.
    - இவரது மற்றொரு பயணக்கட்டுரை – அடுத்த வீடு ஐம்பது மைல் ஆகும்
- நாகசுரக் கருவி ஆச்சா மரத்தில் செய்யப்படுகிறது
- நாகசுரத்தின் மேல் பகுதியில் சீவாளி என்ற கருவி பொருத்தப்படுகிறது. சீவாளி,நாணல் என்றபுல் வகையைக்கொண்டு செய்யப்படுகிறது.
- இந்திய தேசிய ராணுவத்தில் இருந்து 45 வீரர்கள் நேதாஜியால் தேர்வு செய்யப்பட்டு,வான்படைத் தாக்குதலுக்கான சிறப்பு பயிற்சி பெறுவதற்காக, ஜப்பானில் உள்ள இம்பீரியல் மிலிட்டரி அகடமிக்கு அனுப்பி வைக்கப்பட்டனர். அந்த 45 பேர் கொண்ட பயிற்சி பிரிவின் பெயர்தான் – டோக்கியோ கேடட்ஸ்.
- விடுதலையினால் உண்டாகும் மகிழ்ச்சியும் சுதந்திரத்தினால் உண்டாகும் மனநிறைவும் வேண்டுமா? அப்படியானால் அதற்கு விலையுண்டு. அவற்றுக்கான விலை துன்பமும் தியாகமும் தான் - நேதாஜி
- சீவகசிந்தாமணி - 13 இலம்பகள்
- கிருஷ்ணகிரி மாவட்டம் – போச்சம்பள்ளிச் சந்தை 18 ஏக்கர் பரப்பில் 8000 கடைகளுடன் இன்றும் ஞாயிற்றுக்கிழமைகளில் கூடுகிறது.

- *1938 நவம்பர் 13யில் சென்னையில் நடந்த பெண்கள் மாநாட்டில் ஈ.வெ.ரா வுக்குப் பெரியார் என்னும் பட்டம் வழங்கப்பட்டது*
- *தெற்கு ஆசியாவின் சாக்ரடீஸ் - பெரியார்(யுனெஸ்கோ – 1970)*
- *உலகத்திலேயே ஒரு மொழிக்காக உலக மாநாடு நடத்திய முதல் நாடு மலேசியா. மாநாட்டுக்குரிய அம்முதல் மொழியும் தமிழே.*
- *திருவள்ளுவர் பெயரில் முதல் தமிழ் கணிணி 1983 செபடம்பரில் டி.சி.எம் டேட்டா புரொடக்ட்ஸ் என்னும் தனியார் நிறுவனம் உருவாக்கி விற்பனைக்கு கொண்டுவந்தது.*
- *வட இந்திய பெருங்கடலில் உருவாகும் புயல்களுக்கு பெயர் வைக்கும் நடைமுறை 2000 ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது.*
- *புதுதில்லியில் உள்ள உலக வானிலை அமைப்பின் மண்டலச் சிறப்பு வானிலை ஆய்வு மையம் 2004 செப்டம்பரில் இருந்து புயல்களுக்கு பெயர் வைக்க 64 பெயர்களை பட்டியலிட்டுள்ளது*
- *கொரியாலிஸ் விளைவை கண்டுபிடித்தவர் – காஸ்பார்ட் குஸ்டாவ் கொரியாலிஸ்*
- *காலின் ஏழடிப் பின் சென்று – பொருநராற்றுப்படை*
- *ஒன்றிற்கு மேற்பட்ட எச்சங்கள் சேர்ந்து பெயரைக்கொண்டு முடியும் கூட்டுநிலை பெயரெச்சங்களை இக்காலத்தில் பெருமளவில் பயன்படுத்துகிறோம்.*
- *2016 யில் ஐ.பி.எம் நிறுவனத்தின் செயற்கை நுண்ணறிவுக் கணினியான வாட்சன்,சில நிமிடங்களில் இரண்டு கோடித் தரவுகளை அலசி, நோயாளி ஒருவரின் புற்றுநோயைக் கண்டுபிடித்தது.*
- *ஜப்பானில் சாப்ட்வங்கி உருவாக்கிய இயந்திர மனிதனே பெப்பர். இது உலக அளவில் விற்பனையாகும் ஒரு ரோபோ.*
- *அமெரிக்க வானியல் வல்லுநர் எட்வின் ஹப்பிள் 1924யில் நம் பால்வீதி போன்று பல பால்வீதிகள் உள்ளன என்று நிரூபித்தார்.*
- *சிலம்பு செல்வர் - மா.பொ.சிவஞானம்*

## தமிழ் இலக்கணம்

**இலக்கணம் ஐந்து வகைப்படும்.**

1. எழுத்திலக்கணம்
2. சொல்லிலக்கணம்
3. பொருளிலக்கணம்
4. யாப்பிலக்கணம்
5. அணியிலக்கணம்

## 1. எழுத்திலக்கணம்

**எழுத்துகள் இரண்டு வகைப்படும்.**

1. முதலெழுத்துகள் 2. சார்பெழுத்துகள்

### முதலெழுத்துகள்

**இரண்டு வகைப்படும்**

1. உயிரெழுத்துகள் 2. மெய்யெழுத்துகள்

**உயிரெழுத்துகள் இரண்டு வகைப்படும்**

1. குற்றெழுத்துகள் (அ, இ, உ, எ, ஒ)
2. நெட்டெழுத்துகள் (ஆ,ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ)

**மெய்யெழுத்துகள் மூன்று வகைப்படும்**

1. வல்லினம் (க், ச், ட், த், ப், ற்)
2. மெல்லினம் (ங், ஞ், ண், ந், ம், ன்)
3. இடையினம் (ய், ர், ல், வ், ழ், ள்)

**ஆய்த எழுத்து** - முப்புள்ளி, முப்பாற்புள்ளி, தனிநிலை, முற்றாய்தம்

### சார்பெழுத்துகள்

**சார்பெழுத்துகள் பத்து வகைப்படும்**

| | |
|---|---|
| 1. உயிர்மெய் | 2. ஆய்தம் |
| 3. உயிரளபெடை | 4. ஒற்றளபெடை |
| 5. குற்றியலுகரம் | 6. குற்றியலிகரம் |
| 7. ஐகாரக்குறுக்கம் | 8. ஔகாரக்குறுக்கம் |
| 9. மகரக்குறுக்கம் | 10. ஆய்தக்குறுக்கம் |

**அளபெடை**

செய்யுளில் ஓசை குறையும்போது ஒரு சொல்லின் முதலிலும், இடையிலும், இறுதியிலும் நிற்கும் நெட்டெழுத்துகள் ஏழும் தமக்குரிய இரண்டு மாத்திரையிலிருந்து நீண்ட ஒலிப்பதே அளபெடை எனப்படும்.

அளவு =மாத்திரை. எடை= எடுத்தல் என்பது பொருள்.
எழுத்தினது மாத்திரை அளவில் நீட்டி ஒலித்தல்.
மாத்திரை அளவு
உயிர்க்குறில், உயிர்மெய்க் குறில் - ஒன்று
உயிர்நெடில், உயிர்மெய் நெடில் - இரண்டு
மெய், ஆய்தம் - இரை
உயிரளபெடை - மூன்று
ஒற்றளபெடை – ஒன்று

அளபெடை இரண்டு வகைப்படும்.

1. உயிரளபெடை 2. ஒற்றளபெடை

**உயிரளபெடை**

செய்யுளில் ஓசை குறையும்போது அந்த ஒசையை நிறைவு செய்ய உயிர்நெட்டெழுத்துகள் ஏழும் அளபெடுக்கும். இவ்வாறு அளபெடுக்கும்போது அவற்றிற்கு இனமான குறில் எழுத்துகள் பக்கத்தில் வரும்.

ஐகாரத்திற்கு இகரமும் ஔகாரத்திற்கு உகரமும் இனவெழுத்தாக வரும் உயிரளபெடை மூன்று வகைப்படும்.

1. செய்யுளிசை அளபெடை (இசை நிறையளபெடை)
2. இன்னிசை அளபெடை
3. சொல்லிசை அளபெடை

**செய்யுளிசை அளபெடை (இசை நிறையளபெடை)**

செய்யுளில் ஓசை குறையும் இடத்தில் அந்த ஒசையை நிறைவு செய்ய மொழியின் முதலிலும், இடையிலும், இறுதியிலும் நின்ற உயிர் நெடில் எழுத்துகள் ஏழும் தமக்கு இனமாகிய குறில் எழுத்துகளைப் பெற்று உரிய மாத்திரையிலிருந்து மிகுந்து ஒலிக்கும். இதுவே செய்யுளிசை அளபெடை எனப்படும்.

(எ.கா) கெடாஅ, விடாஅர் உழா அர், படா அர், தொழூஉம்,தூஉ, தரூஉம்,ஆஅதும்,ஓஒதல், தொழாஅள், உறாஅமை, பெறாஅ

**இன்னிசை அளபெடை**

செய்யுளில் ஓசை குறையாத இடத்திலும் இனிய ஒசை தருவதற்காக குறில் நெடிலாக மாறி அளபெடுப்பது இன்னிசை அளபெடையாகும்.

(எ.கா) கெடுப்பதூஉம், எடுப்பதூஉம், உள்ளதூஉம், அதனினூஉங்கு

**சொல்லிசை அளபெடை**

செய்யுளில் ஓசை குறையாத இடத்திலும் பெயர்ச்சொல் வினையெச்சப் பொருள் தரும் பொருட்டு அளபெடுப்பத சொல்லிசை அளபெடையாகும்.

(எ.கா) நசைஇ, குடிதழீஇ, அடிதழீஇ, (தழீ – தழுவுதல் என்பது பொருள்) தழுவுதல் என்னும் தொழிற்பெயர்ச் சொல் தழீஇ (தழுவி) என வினையெச்சச் சொல்லாக அளபெடுத்ததால் இது சொல்லிசை அளபெடை மேலும் சில எ.கா: அளைஇ, நிலைஇய, செழீஇய, பெய்திரீஇ, இரீஇ, கடினமுறீஇ.

**ஒற்றளபெடை**

செய்யுளில் ஓசை குறைந்தால் மெய்யெழுத்துகளும் அளபெடுக்கும் இது ஒற்றளபெடையாகும்.

(எ.கா) எங்கிறைவனுள னென்பாய், வெஃஃகுவார்க்கில்லை வீடு, அரங்ங்கம், மஞ்ஞ்சு

இவ்வாறு ங,ஞ், ண், ந், ம், ன், வ், ய். ல், ள் ஆகிய பத்து மெய்யும் ஃ என்ற ஆய்த எழுத்து ஒன்றும் ஆக பதினோர் எழுத்துகளும் ஒரு குறிலை அடுத்தும் இரு குறில்களை அடுத்தும் செய்யுளில் இனிய ஓசை வேண்டி அளபெடுக்கும். இவ்வாறு அளபெடுப்பதே ஒற்றளபெடை ஆகும்.

**குற்றியலுகரம்**

குற்றியலுகரம் = குறுமை + இயல் + உகரம்

(கு, சு, டு, து, பு, று)

ஒரு மாத்திரையளவு ஒலிக்க வேண்டிய உகரம் அரை மாத்திரையளவாகக் குறைந்தொலிப்பது குற்றியலுகரமாகும்.

தனி நெடிலுடனோ, பல எழுத்துக்களைத் தொடர்ந்தோ சொல்லுக்கு இறுதியில் வல்லின மெய்யோட சேர்ந்து வரும் உகரம் தனக்குரிய ஒரு மாத்திரையிலிருந்து குறைந்து அரை மாத்திரையளவே ஒலிக்கும். இதனையே குற்றியலுகரம் என்பர்.

பசு – காசு, படு – பாடு, அது – பந்து

மேற்கண்ட சொற்களில் பசு, படு, அது போன்ற சொற்கள் இதழ் குவித்து நன்கு ஒலிக்கப்படுகிறது. இங்கு கு,சு, டு, து போன்ற எழுத்துக்களுக்கு ஒரு மாத்திரை அளவு.

ஆனால் காசு, பாடு, பந்து போன்ற சொற்களில் சு, டு, து போன்ற எழுத்துக்களின் உகரம் குறைந்து ஒலிக்கப்படுகிறது. இதுவே குற்றியலுகரம் ஆகும். இங்கு சு, டு, து, ஆகிய எழுத்துக்கள் தனக்குரிய ஒரு மாத்திரை அளவிலிருந்து குறைந்து அரை மாத்திரையாக ஒலிக்கிறது.

1. தனி ஒர குற்றெழுத்தை அடுத்து வரும் உகர எழுத்துக்கள் தனக்குரிய (எ.கா) அது, பசு, படு, பெறு.
2. சொல்லுக்கு முதலிலும், இடையிலும் வரும் ‘உகரம்’ தனக்குரிய ஒரு மாத்திரை அளவில் குறைந்து ஒலிக்காது.
3. சொல்லுக்கு இறுதியில் வரும் வல்லின மெய்களை (க், ச், ட், த், ப், ற்) ஊர்ந்த உகரம் (கு, சு, டு,து, பு, று) மட்டுமே தனக்குரிய ஒரு மாத்திரை அளவில் குறைந்து

அரை மாத்திரையாக ஒலிக்கும். சொல்லின் இறுதி எழுத்தாக நிற்கும் குற்றியலுகரத்தின் முன் உள்ள எழுத்தை நோக்கக் குற்றியலுகரம் ஆறு வகையாகப் பிரிக்கப்படுகிறது.

**1. நெடில் தொடர்க் குற்றியலுகரம்**

தனி நெடிலைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம் நெடல் தொடர்க் குற்றியலுகரம் ஆகும். (தனி நெடில் என்பது உயிர் நெடிலாகவும், உயிர்மெய் நெடிலாகவும் இருக்கலாம்)

(எ.கா.) பாகு, காசு, தோடு, காது, சோறு

**2. ஆய்தத் தொடர் குற்றியலுகரம்**

ஆய்த எழுத்தைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம் உயிர்த் தொடர் குற்றியலுகரம் ஆகும்.

(எ.கா) எஃகு, அஃது, கஃசு

**3. உயிர்த்தொடர் குற்றியலுகரம்**

உயிரெழுத்தைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம் உயிர்தொடர்க் குற்றியலுகரம் ஆகும்.

(எ.கா) அழகு, முரசு, பண்பாடு, எருது, மரபு, பாலாறு

இச்சொற்களில் வல்லின மெய்களை ஊர்ந்து வந்த உகரம் (கு, சு, டு, து, பு, று) உயிரெழுத்தைத் தொடர்ந்து (ழ= ழ் + அ, ர = ர்+ அ, பா= ப் +ஆ, ரு= ர்+ உ, லா = ல்+ஆ)ஈற்றில் அமைந்து குறைந்து ஒலிப்பதால் குற்றியலுகரம் ஆயிற்று.

குறிப்பு: நெடில் தொடர்க் குற்றியலுகரம் அமைந்த சொல் நெடிலை உடைய இரண்டு எழுத்துச் சொல்லாக மட்டுமே வரும்.

**4.வன்தொடர்க் குற்றியலுகரம்**

வல்லின மெய்யெழுத்தைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம் வன்தொடர்க் குற்றியலுகரம் ஆகும்.

(எ.கா) பாக்கு, தச்சு, தட்டு, பத்து, உப்பு, புற்று

**5. மென்தொடர்க் குற்றியலுகரம்**

மெல்லின மெய்யெழுத்தைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம் மென்தொடர்க் குற்றியலுகரம் ஆகும்.

(எ.கா) பாங்கு, பஞ்சு, வண்டு, பந்து, அம்பு, கன்று

**6.இடைத்தொடர்க் குற்றியலுகரம்**

இடையின மெய்யெழுத்தைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம் இடைத் தொடர்க் குற்றியலுகரம் ஆகும்.

(எ.கா.) மூழ்கு, செய்து, சால்பு, சார்பு

**முற்றியலுகரம்**

தனக்குரிய ஒரு மாத்திரை அளவிலிருந்து குறையாத உகரம் முற்றியலுகரம் எனப்படும்.

1. பகு, பசு, படு, அது, தபு, பெறு - இவை தனிக்குறில் எழுத்தை அடுத்து வரும் வல்லின உகரம் பெற்ற முற்றியலுகரங்கள்.
2. காணு, உண்ணு, உறுமு - இவற்றின் ஈற்றிலுள்ள ணு, மு உகரங்கள் முற்றியலுகரங்கள்.
3. எழு, தள்ளு, கதவு - இவற்றின் ஈற்றிலுள்ள இடையின உகரங்கள் முற்றியலுகரங்கள்.

**குற்றியலிகரம்**

குறுமை +இயல் +இகரம்= குற்றியலிகரம்

குறுகிய ஓசையுடைய இகரம்.

இகரம் தனக்குரிய ஒரு மாத்திரை அளவில் இருந்து அரை மாத்திரையாகக் குறைந்தொலிப்பது குற்றியலிகரமாகும்.

வீடு+ யாது?= வீடியாது?

ஒரு குற்றியலுகரச் சொல்லின் (வீடு) முன் 'யா' என்னும் எழுத்தை முதலாக உடைய சொல் (யாது) வந்து சேரும்போது, அக்குற்றியலுகரச் சொல்லின் இறுதியில் உள்ள உகரம் இகரமாக மாறும். (ட்+இ=டி) (வீடியாது) இதுவே குற்றியலிகரம் எனப்படும். இதற்குக் கால அளவு அரை மாத்திரை.

நிலை மொழியின் ஈற்றெழுத்து குற்றியலுகரமாக இருந்து வருமொழியின் முதலெழுத்து யகரமாக இருந்தால் அவையிரண்டும் புணரும்பொழுது நிலைமொழி ஈற்றிலுள்ள குற்றியலுகரம் இகரமாகத் திரியும். மேலும் 'மியா' என்னும் அசைச்சொல் வருமொழியாக வந்தால் அதில் உள்ள இகரமும் (ம் இ மி) ஒலி குறைந்து குற்றியலிகரம் ஆகும்.

கொக்கு+யாது? = கொக்கியாது?

எஃகு+ யாது? = எஃகியாது?

உலகு+ யாது? = உலகியாது?

கேள்+ மியா? = கேண்மியா?

**ஐகாரக் குறுக்கம்**

ஐகாரம் + குறுக்கம் =ஐகாரக்குறுக்கம்

ஐகாரம் தனக்குரிய இரண்டு மாத்திரை அளவிலிருந்து குறைந்து ஒன்றரை மாத்திரையாகவும், ஒரு மாத்திரையாகவும் ஒலிப்பது ஐகாரக்குறுக்கம் ஆகும்.

ஐ,வை, தை

ஐகாரம் தனித்து ஒலிக்கும்போது இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கின்றது.

ஐகாரம் மொழிக்கு முதல், இடை, கடை ஆகிய இடங்களில் வரும்பொழுது, மொழிக்கு முதலில் ஒன்றரை மாத்திரையளவும்,ஏனைய இடங்களில் ஒரு மாத்திரையளவும் ஒலிக்கும். ஐகாரம் இவ்வாறு குறைந்து ஒலிப்பதே ஐகாரக் குறுக்கம் ஆகும்.

ஐந்து – ஐகாரம் மொழிக்கு முதலில் - 11/2 மாத்திரை

இளைஞர் - ஐகாரம் மொழிக்கு இடையில் - 1 மாத்திரை

பறவை – ஐகாரம் மொழிக்குக் கடையில் - 1 மாத்திரை

**ஔகாரக் குறுக்கம்**

ஔகாரம் +குறுக்கம்= ஔகாரக் குறுக்கம்

ஔகாரம் தனக்குரிய இரண்டு மாத்திரையிலிருந்து குறைந்து ஒன்றரை மாத்தரையாகவும், ஒரு மாத்திரையாகவும் ஒலிப்பது ஔகாரக் குறுக்கம் ஆகும்.

ஔகாரம் தனித்து ஒலிக்கும் போது மட்டும் தனக்குரிய இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கும்.

மொழிக்கு முதலில் வரும்பொழுது ஒன்றரை மாத்திரை அளவே ஒலிக்கும். ஔகாரம் மொழிக்கு இடையிலும், கடையிலும் வராது.

ஔவை – மொழிக்கு முதலில் ஒன்றரை மாத்திரை.

**மகரக் குறுக்கம்**

மகரம் +குறுக்கம் = மகரக் குறுக்கம்

'ம்' என்னும் எழுத்து தனக்குரிய அரை மாத்திரையிலிருந்து கால் மாத்திரையாகக் குறைந்தொலிப்பது மகரக் குறுக்கமாகும்.

செய்யுளில் போலும், மருளும் போன்ற சொற்களில் ஈற்றயல் எழுத்துகளிலுள்ள உகரங்கள் கெட்டுப் போல்ம், மருள்ம் என்றாகிப் போன்ம், மருண்ம், என்று திரியும். அவ்வாறு திரிந்த னகர, ணகரங்களின் முன் உள்ள மகரம் அரை மாத்திரையிலிருந்து கால் மாத்திரை அளவே ஒலிக்கும்.

தரும் வளவன், வரும் வண்டி ஆகிய தொடர்களில் நிலை மொழியீற்றில் மகரமும் வருமொழி முதலில் வகரமும் உள்ளன. இதுபோல் நிலை மொழியீற்றில் மகரம் இருந்து வகர முதல் மொழியோடு புணரும்போது நிலைமொழியீற்றிலுள்ள மகரம் குறைந்து கால் மாத்திரையளவே ஒலிக்கும். இவ்வாறு குறைந்தொலிக்கும் குறுக்கம் மகரக் குறுக்கம் ஆகும்.

**ஆய்தக் குறுக்கம்**

ஆய்தம் +குறுக்கம் =ஆய்தக் குறுக்கம்

ஆய்த எழுத்து தனக்குரிய அரை மாத்திரையிலிருந்த கால் மாத்திரையாகக் குறைந்தொலிப்பது ஆய்தக் குறுக்கமாகும்.

கல் +தீது =கஃறீது

முள் +தீது =முஃடீது

நிலைமொழியில் தனிக்குறிலைச் சார்ந்து வரும் லகர, ளகர மெய்கள் முன்னே, வருமொழி முதலில் தகரம் வந்தால் லகரத்திற்கு முன் வரும் தகரம் றகரமாகும். ளகரத்திற்கு முன் வரும் தகரம் டகரமாகும். அவ்வாறு திரிந்து றகர, டகரங்கள் புணரும்போது நிலைமொழி ஈற்றிலுள்ள லகர, ளகரங்கள் ஆய்த எழுத்தாகத் திரியும். இவ்வாறு திரிகின்ற ஆய்த எழுத்து தனக்குரிய அரை மாத்திரையிலிருந்து கால் மாத்திரையாகக் குறைந்து ஒலிக்கும். இதற்கு ஆய்தக் குறுக்கம் என்று பெயர்.

## 2. சொல்லிலக்கணம்

**இலக்கண வகைப்படி சொற்களின் நான்கு வகைகள்**

1. பெயர்ச்சொல் (எ.கா.) அப்பா, மாநகர், மதுரை
2. வினைச்சொல் (எ.கா.) வந்தான், சென்றன
3. இடைச்சொல் (எ.கா.) உம், ஐ
4. உரிச்சொல் (எ.கா.) மா, சால

**இலக்கிய வகைப்படி சொற்களின் நான்கு வகைகள்**

1. இயற்சொல் 2. திரிசொல் 3. திசைச்சொல் 4. வடசொல்

- **இயற்சொல்** – எல்லோருக்கும் பொருள் புரிவது (எ.கா) தீ, காடு, மரம்.
  பெயர் இயற்சொல், வினை இயற்சொல் என இரு வகைப்படும்
- **திரிசொல்** – கற்றவர்களுக்கு மட்டும் பொருள் புரிவது (எ.கா.) பீலி (மயில் தோகை), உகிர் (நகம்), செல் (மேகம்).
  பெயர் திரிசொல், வினை திரிசொல் என இரு வகைப்படும்
- **திசைச்சொல்** – தமிழ்நாட்டைச் சூழ்ந்துள்ள பிற பகுதிகளில் இருந்து தமிழில் வழங்கப்பெறும் சொற்கள் (எ.கா.) கேணி, பெற்றம்
- **வடசொல்**– (எ.கா.) கமலம், விஷம், புஷ்பம்

**மூவகை மொழிகள்:-** 1. தனிமொழி 2. தொடர்மொழி 3. பொதுமொழி

**வழக்கு (மரபு):**

நம் முன்னோர்கள் எந்தெந்தப் பொருளை எந்தெந்தச் சொற்களால் வழங்கினார்களோ, அவற்றை அவ்வாறே நாமும் வழங்கும் முறை 'வழக்கு'.

**வழக்கு இரு வகைப்படும்:** 1. இயல்பு வழக்கு 2. தகுதி வழக்கு

**1. இயல்பு வழக்கு**

ஒரு பொருளைச் சுட்டுவதற்கு எச்சொல் இயல்பாக அமைந்ததோ, அந்தப் பொருளை அந்தச் சொல்லால் வழங்கும் வழக்கு.

எ.கா. தமிழ் இனிமையான மொழி

இயல்பு வழக்கு மூன்று வகைப்படும்

1. இலக்கணமுடையது 2. இலக்கணப்போலி 3. மரூஉ

**இலக்கணமுடையது:** இலக்கண நெறியோடு வழங்கி வரும் சொற்கள் 'இலக்கண முடையது' எனப்படும்.

எ.கா. உலகம் சுழல்கிறது, நெல் விளைந்தது

**இலக்கணப்போலி:** இலக்கண நெறிக்குப் பொருந்தாதாயிருப்பினும் அறிவுடையார் தொன்று தொட்டு வழங்கி வரும் காரணத்தால் இலக்கணமுடையவை போன்று ஏற்றுக் கொள்ளப்படும் சொற்கள் 'இலக்கணப்போலி' என்று அழைக்கப்படுகிறது. (எ.கா)

| இலக்கண வழக்கு | இலக்கணப் போலி |
|---|---|
| இல்வாய் | வாயில் |
| நகர்ப்புறம் | புறநகர் |
| தசை | சதை |
| கோவில் | கோயில் |
| இல்முன் | முன்றில் |
| மரநுனி | நுனிமரம் |
| புறஉலா | உலாப்புறம் |

**மரூஉ:** இலக்கணம் சிதைந்து, வடிவம் மாறி வழங்கி வரும் சொற்களை அறிவுடையோர் ஏற்றுக்கொண்டுள்ளதையே 'மரூஉ' என்று அழைக்கின்றோம். (எ.கா)

| இலக்கண வழக்கு | மருவி வழங்குவது |
|---|---|
| தஞ்சாவூர் | தஞ்சை |
| கும்பகோணம் | குடந்தை |
| புதுச்சேரி | புதுவை |
| சோழ நாடு | சோணாடு |
| பெயர் | பேர் |
| எந்தை | என் தந்தை |

**2. தகுதி வழக்கு**

ஒருவரிடம் பேசும்பொழுது பேசுவதற்குத் தகுதியற்ற சொற்களைச் சொல்ல நேர்ந்தால் அவற்றை மறைத்து வேறு சொற்களால் கூறுவது 'தகுதி வழக்கு' எனப்படும்.

**தகுதி வழக்கு மூன்று வகைப்படும்**

1. இடக்கரடக்கல் 2. மங்கலம் 3. குழூஉக் குறி

**இடக்கடரக்கல்:** சொல்லத் தகாதச் சொற்களை நீக்கித் தகுந்த சொற்களால் பொருளைத் தகாதச் சொற்களை நீக்கித் தகுந்த சொற்களால் பொருளைத் தெரிவிப்பது 'இடக்கரடக்கல்' எனப்படும். (இடக்கர் – சொல்லத் தகாததுஅூ அடக்கல் – மறைத்துக் கூறுதல்)

எ.கா. கை கழுவினான், கால் கழுவி வந்தான்.

இவை முறையே உண்டபின் எச்சிலைக் கழுவினான், மலம் கழுவினான் என்னும் இடர்ப்பாடான பொருளைத் தருகின்றன. ஆகவே அச்சொற்களை நீக்கித் தகுந்த சொற்களைச் கொண்டு அதன் பொருள் வழங்கப்படுவதால் இது 'இடக்கரடக்கல்' எனப்படுகிறது.

**மங்கலம்:** அமங்கலமான சொல்லை மறைத்து மங்கலமான சொல்லால் பொருளை விளக்குவது 'மங்கலம்' எனப்படும்.

எ.கா. உ.வே. சாமிநாத ஐயர் புகழுடம்பு அடைந்தார்

| அமங்கலம் | மங்கலம் |
|---|---|
| செத்தார் | துஞ்சினார் |
| சுடுகாடு | நன்காடு |
| காராடு | வெள்ளாடு |
| கொடிய நஞ்சுடைபாம்பு | நல்ல பாம்பு |
| ஓலை | திருமுகம் |
| தாலி அறுந்தது | தாலி பெருகிற்று |

**குழூஉக்குறி:** ஒரு பொருளுக்கு இயல்பாய் அமைந்த பெயரை ஒழித்து, மற்றவர் அறியாதபடி தம் குழுவினர்க்கு மட்டும் பொருள் விளங்குமாறு அடையாளச் சொல்லால் ஒரு குழுவினர் வழங்குவது 'குழூஉக் குறி' எனப்படும். (குழூஉ – கூட்டம், குறி — அடையாளம்)

எ.கா. பொற்கொல்லர் பொன்னைப் 'பறி' என்பர்.

யானைப் பாகர் ஆடையைக் 'காரை' என்பர்.

வேடர் கள்ளைச் 'சொல் விளம்பி' என்பர்.

## வழு நிலை, வழா நிலை, வழுவமைதி

**வழுநிலை:**

இலக்கண முறைக்கு மாறாகப் பேசுவதும், எழுதுவதும், வழு எனப்படும் (வழு — குற்றம்) எ.கா. நான் நாளை வந்தேன். குயில் ஆடும்

வழு நிலை **ஏழு வகைப்படும்.**

1. **திணை வழு :** எ.கா. சுமதி வந்தது
2. **பால் வழு :** எ.கா. செல்வம் வந்தாள்
3. **இட வழு :** எ.கா. நீ வந்தான்
4. **கால வழு :** எ.கா. நேற்று வருவான்
5. **வினா வழு :** ஒரு விரலைக் காட்டிச் சிறிதோ? பெரிதோ? என வினவுவது வினாவழுவாகும்

6. **விடை வழு :** பட்டுக்கோட்டைக்கு வழியாது? என்னும் வினாவிற்கு

'கொட்டைப் பாக்கு கிலோ ஐம்பது ரூபாய்' என்று விடை கூறுவது விடைவழு.

7. **மரபு வழு :** குயில் கத்தும் என்பது மரபு வழு.

**வழா நிலை:** இலக்கணப் பிழையின்றிப் பேசுவதும் எழுதுவதும் வழா நிலை எனப்படும். (வழா நிலை - இலக்கணப் பிழையற்ற முறை, வழு - பிழை)

எ.கா. நான் நாளை வருவேன் , குயில் கூவும்

வழா நிலை **ஆறு வகை**ப்படும். அவை

1. திணைவழா நிலை 2. பால் வழா நிலை 3. இடவழா நிலை 4. கால வழா நிலை 5. வினா வழா நிலை 6. விடை வழா நிலை

**வழுவமைதி:**

இலக்கண முறையின்றி அமைந்திருப்பினும் ஒரு காரணம் கருதி இலக்கணமுடையதைப் போல ஏற்றுக் கொள்வது வழுவமைதியாகும். (வழு – குற்றம் அமைதி – ஏற்றுக் கொள்ளுதல்)

எ.கா. தாய் தன் குழந்தையை 'என் கண்ணே! கண்மணியே' என்று பாராட்டு அன்பு காரணமாக வந்த வழுவமைதி ஆகும்.

வழுவமைதி **பல வகை**ப்படும்.

1. திணை வழுவமைதி : திங்களும் சான்றோரும் ஒப்பர்.
2. பால் வழுவமைதி : தந்தை தன் மகளை வாடா என்று அழைத்தல்
3. இட வழுவமைதி : இந்த கண்ணன் ஒரு நாளும் பொய் கூற மாட்டான்
4. கால வழுவமைதி : பிரதமர் நாளை சென்னை வருகிறார்.
5. மரபு வழுவமைதி : கத்தும் குயிலோசை என்றன் காதில் விழ வேண்டும்.

**தொகா நிலைத் தொடர்**

**9 வகை**

எழுவாய்த் தொடர் - கபிலன் வந்தான்
விளித் தொடர் - கதிரவா வா
வினைமுற்றுத் தொடர் - கண்டேன் சீதையை
பெயரெச்சத் தொடர் - விழுந்த மரம்
வினையெச்சத் தொடர் - வந்து போனான்
வேற்றுமைத் தொகா நிலைத் தொடர் - வீட்டைக் கட்டினான்
இடைச் சொற்றொடர் - மற்றொன்று
உரிச்சொற்றொடர் - மாமுனிவர்
அடுக்குத் தொடர் - வாழ்க! வாழ்க!

## 3.பொருளிலக்கணம்

**பொருள்கோள்**

ஒரு செய்யுளில் உள்ள சீர்களையோ, அடிகளையோ பொருள் உணர்வுக்கு ஏற்றவகையில் அமைத்துக் கொள்ளும் முறையைப் பொருள்கோள் (பொருள் கொள்ளும்முறை) என வழங்குவர்.

பொருள்கோள் **எட்டு வகை**ப்படும்.

1. **ஆற்றுநீர்ப் பொருள்கோள்:** இடையறாது செல்லும் ஆற்றுநீரைப்போலப் பாடலின் சொற்கள் முன்பின் மாறாது நேரே சென்று பொருள்கொள்வது ஆற்றுநீர்ப் பொருள்கோளாகும்.

(எ-டு) பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

2. **மொழிமாற்றுப் பொருள்கோள் :** ஓரடியுள்ள சொற்களை, அதைவரும் பொருளுக்கு ஏற்ப மாற்றிக் கூறுதல் மொழிமாற்றுப் பொருள்கோள் என வழங்கப்படும்.

(எ-டு)அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்.

அருள்யாதெனில் கொல்லாமை; அருளல்லது யாதெனில் உயிர்க்கொலை எனப்பொருள் கொள்வதால் மொழிமாற்றுப் பொருள்கோள்.

3. **நிரல்நிறைப் பொருள்கோள் :** மாறிமாறி இருக்கின்ற சொற்களை வரிசையாக அமைத்துப் பொருள் கொள்வது நிரல்நிறைப் பொருள்கோள்.

(எ-டு) அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பன்பும் பயனும் அது.

4. **விற்பூட்டுப் பொருள்கோள் (பூட்டுவிற் பொருள்கோள்) :** வில்லின் இருமுனைகளையும் இணைத்துக் கட்டுதல்போலச் செய்யுளின் முதலில் அமைந்துள்ள சொல்லும், இறுதியில் அமைந்துள்ள சொல்லும் பொருள்படப் பொருத்துவது விற்பூட்டுப் பொருள்கோள்.

(எ-டு) நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு.

உலகு என்னும் இறுதிச்சொல் முதல்சொல்லான் நெருநல் என்பதோடு சேர்த்துப் பொருள் கொள்வதால் இது பூட்டுவில் பொருள்கோள்.

5. **தாப்பிசைப் பொருள்கோள் :** ஊஞ்சலின் நடுநின்ற கயிறு முன்னும் பின்னும் சென்று வருவதுபோலச் செய்யுளின் நடுவில் அமைந்திருக்கும் சொல், செய்யுளின் முதலிலும் இறுதியிலும் அமைந்திருக்கும் சொற்களுடன் பொருந்திப் பொருளைத் தருவது தாப்பிசைப் பொருள்கோள்.

தாம்பு + இசை = தாப்பிசை – ஊஞ்சல் கயிறு அசைதல் போல.

(தாம்பு = ஊஞ்சல் கயிறு)

(எ-டு)இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

இப்பாடலில் 'சினத்தை' என்னும் நடுநின்ற சொல்லைச், சினத்தை உடையவர் (இறந்தார்) இறந்தார் அனையர் எனவும், சினத்தைத் துறந்தார் (துறந்தார்) ஞானியர் துணை எனவும் அமைத்துப் பொருள் கொள்ள வேண்டும்.

6. **அளைமறிபாப்புப் பொருள்கோள் :** பாம்பு, புற்றில் தலைவைத்து நுழையும்போது, தலை மேலாகவும், உடல் அடுத்தும் செல்வதுபோலச் செய்யுளின் இறுதியிலிருந்து சொற்களை எடுத்து முதலில் வைத்துக் கூட்டிப் பொருள் கொள்வது அளைமறிபாப்புப் பொருள்கோள். (அளை – புற்று, பாப்பு – பாம்பு)

7. **கொண்டுகூட்டுப் பொருள்கோள் :** செய்யுளின் பல அடிகளிலும் கூறப்பட்டுள்ள சொற்களைப் பொருளுக்கு ஏற்பக் கூட்டிப் பொருள்கொள்வது கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

(எ-டு)கட்டிக் கரும்பு கசக்கும் மிகக்கனிந்த
எட்டிக் கனியினிக்கும் என்னூரில் - பட்டியுள
காளை படிபால் கறக்குமே நல்லபசு
வேளை தவிரா துமும்.

குறிப்பு : மொழிமாற்றுப் பொருள்கோள் என்பது அடிதோறும் உள்ள சொற்களை முன்பின்னாக மாற்றிக்கொள்வது. கொண்டுகூட்டுப் பொருள்கோள் என்பது அடிகள் முழுதும் உள்ள சொற்களை மாற்றிப் பொருள்கொள்வது.

8. **அடிமறிமாற்றுப் பொருள்கோள் :** செய்யுளின் எல்லா அடிகளையும் முன்பின்னாக மாற்றிப் பொருள் கொண்டாலும் பொருளும் ஓசையும் சிதையாமல் வருவது அடிமறிமாற்றுப் பொருள்கோள்.

(எ-டு)மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்தோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழி யான்வாழு மாறே.

இப்பாடலில் உள்ள அடிகளை முன்பின்னாக எப்படி மாற்றிப் பொருள் கொண்டாலும் பொருளும் ஓசையும் சிதையாது.

## 4.யாப்பு இலக்கணம்

- செய்யுள் இயற்றும் முறை பற்றிக் கூறும் இலக்கணம்
- (யாப்பு – யாத்தல், கட்டுதல், பொருள் பொருந்தத் தொடருமாறு சொற்களை அமைத்தல், செய்யுளைக் கட்டுதல்)
- செய்யுள், பாட்டு, தூக்கு, கவிதை என்பன ஒரு பொருள் குறித்த பல சொற்கள்.

**யாப்பின் உறுப்புகள் ஆறு**

1. எழுத்து 2. அசை 3. சீர் 4. தளை 5. அடி 6. தோடை இவைகளைச் செய்யுள் உறுப்புகள் என்றும் கூறுவர்.

"எழுத்தசை சீர்தளை அடிதொடை ஆறும்
செய்யுள் உறுப்பெனச் செப்பினர் புலவர்"

எலும்பு, தசை, நரம்பு முதலியவற்றால் கட்டப்பெற்றதை யாக்கை அல்லது உடம்பு என்பத போல எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை முதலியவற்றால் கட்டப்பெற்றது யாப்பு (செய்யுள்) எனப்பெற்றது.

**யாப்பு உறுப்புகளுக்கான பெயர்க்காரணம்**

எழுதப்படுதலின் எழுத்தே; அவ்வெழுத்து
அசைத்திசை கோடலின் அசையே; அசையியைந்து
சீர்கொள நிற்றலிற் சீரே; சீரிரண்டு
தட்டு நிற்றலின் தளையே; அடியிரண்டு
தொடுத்தல் முதலாயின தொடையே; அத்தொடை
பாவி நடத்தலிற் பாவே; பாவொத்து
இனமா நடத்தலின் இனமெனப் படுமே.
(யாப்பருங்கலக் காரிகை – உரைமேற்கொள் பாடல்)

**எழுத்து**

- செய்யுளில் குறில், நெடில், மெய், ஆய்தம் என்றும் எழுத்துக்கள் முதன்மையாகக் கருதப்படும்.
- குறிலில் உயிர்க்குறிலும், உயிர்மெய்க்குறிலும் அடங்கும்.
- நெடிலில் உயிர்நெடிலும், உயிர்மெய் நெடிலும் அடங்கும்.
- மெய் - ஒற்று எனவும் சொல்லப்படும்.
- செய்யுளில் ஆய்தம் மெய்யாகக் கருதப்படும்.

**அசை**

- ஒரு சொல் அல்லது சீரைச் சொல்லும்போது (சொல் என்பது யாப்பிலக்கணத்தின் உறுப்பாக வரும்பொழுது 'சீர்' எனப் பெயர் பெறும்.) குறில், நெடில், ஒற்று என்னும் மூவகை எழுத்துகளால் அசைக்கப்படுவது அசை எனப்படும்.
- அசை சீருக்கு உறுப்பாக அமையும்.
- 'எழுத்து இசைத்து அசை கோடலின் அசையே' – காக்கைப்பாடினியம்.

**நேரசை**

- குறில் தனித்து வருதல் - க
- குறிலோடு ஒற்றெழுத்து (மெய்யெழுத்து) சேர்ந்து வருதல் கல்
- நெடில் தனித்து வருதல் - கா
- நெடிலோடு ஒற்று சேர்ந்து வருதல் - கால்
- குறில் தனித்தும், குறிலோடு ஒற்றடுத்தும், நெடில் தனித்தும் நெடிலோடு ஒற்றடுத்தும் வந்தால் நேரசையாகும்.

**நிரை அசை**

- இரண்டு குறில்கள் இணைந்து வருதல் - பணி
- இரண்டு குறில்களுக்கு அடுத்து ஒற்றெடுத்து வருதல் - அணில்
- குறிலும் நெடிலும் இணைந்து வருதல் - நிலா
- குறிலும் நெடிலும் ஒற்றும் இணைந்து வருதல் - புலால்
- இருகுறில்கள் இணைந்தும், ஒற்றடுத்தும், குறில் நெடில் இணைந்தும், ஒற்றடுத்தும் வந்தால் நிரையசையாகும்.
- அசைகளைப் பிரித்தபின், பிரிக்கப்பட்ட அசையில் ஒற்றெழுத்துகளை நீக்கி எஞ்சிய எழுத்துகளை எண்ணிப் பார்க்க வேண்டும். ஓரெழுத்து இருந்தால் நேரசை என்றும், இரண்டெழுத்து இருந்தால் நிரையசை என்றும் குறித்தல் வேண்டும்.

**சீர்**

- ஓர் அசை தனியாகவோ, பல அசைகள் சேர்ந்தோ ஓர் ஒழுங்குபடத் செய்யுள் அடிகளில் அமைவது சீர் எனப்படும். (சீர் - ஒழுங்கு) இருவித அசைகளும், தனித்தும், இணைந்தும் அமைவது சீர் ஆகும். சீர் செய்யுள் அடிக்கு உறுப்பாக வரும்.
- சீர் நான்கு வகைப்படும்
- 1. ஓரசைச்சீர் 2. ஈரசைச்சீர் 3. மூவசைச் சீர் 4. நாலசைச் சீர்
- அசை இரண்டு சீர்கொள நிற்றலின் சீரே – காக்கைப் பாடினியம்

**ஓரசைச்சீர்:** வெண்பாவின் ஈற்றில் நேரசை நிரையசையுள் ஏதேனும் ஒன்று தனித்து நின்று சீராய் அமையும். அவை 'அசைச்சீர்' எனப்படும். அவற்றிற்கு வாய்பாடு நாள். (ஓரசை – நேர்) மலர் (ஓரசை - நிரை) என்பனவாம்.

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல்.

இல் - நேர் - நாள் (வாய்பாடு)

அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்.

கொளல் - நிரை – மலர் (வாய்ப்பாடு)

இவ்வாறு இலக்கண முறைப்படி வெண்பாவில் ஈற்றில் ஒரு நேரசையோ, ஒரு நிரையசையோ தனித்து வந்தால் அவற்றிக்கு முறையே நாள், மலர் என வாய்பாடு குறிக்க வேண்டும்.

வெண்பாவின் ஈற்றில் நேரசை, நிரையசை தனியாக வருவத போன்று நேர்பு, நிரைபு என குற்றியலுகர வாய்பாட்டுச் சீர்களும் அமைவதுண்டு.

கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று

றற்ஃறு – நேர் நேர் - நேர்பு – காசு என்று குறிக்க வேண்டும்

எண்ணுவம் என்பது இழுக்கு.

இழுக்ஃகு – நிரை நேர் - நிரைபு – பிறப்பு என்று குறிக்க வேண்டும்.

**ஓரசைச்சீரில் நினைவிற் கொள்ள வேண்டியவை:**

| | |
|---|---|
| நேர் - நாள் | நிரை - மலர் |
| நேர் நேர் - நேர்பு – காசு | நிரை நேர் - நிரைபு – பிறப்பு |

"நாள்மலர் காசு பிறப்பெனும் நான்கும் வெண்பா வீற்றின் மேவிடும் சீரே"

திருக்குறளில் ஈற்றுச்சீர் அமைப்பின் விகிதம்
நாள் என்னும் வாய்பாட்டில் 174 குறட்பாக்கள்
மலர் என்னும் வாய்பாட்டில் 665 குறட்பாக்கள்
காசு என்னும் வாய்பாட்டில் 200 குறட்பாக்கள்
பிறப்பு என்னும் வாய்பாட்டில் 291 குறட்பாக்கள்

**ஈரசைச்சீர் (4):** நேர், நிரை என்னும் அசைகள், இரண்டிரண்டாக இணைந்து வரும் சீர்கள் ஈரசைச்சீர் ஆகும்.

| அசை | வாய்பாடு |
|---|---|
| நேர் நேர் | தேமா - மாச்சீர் |
| நிரை நேர் | புளிமா - மாச்சீர் |
| நேர் நிரை | கூவிளம் - விளச்சீர் |
| நிரை நிரை | கருவிளம் - விளச்சீர் |

ஈரசைச்சீர் நான்கும் ஆசிரியப்பாவிற்கு உரியன.
இவை இயற்சீர் எனவும், ஆசிரிய உரிச்சீர் எனவும் வழங்கப்படும்.

**மூவசைச்சீர்:** ஈரசைச் சீர்கள் ஒவ்வொன்றின் இறுதியிலும் 'நேர்' என்னும் அசையைச் சேர்த்தால் 'நேர்'ஈற்று மூவகைச் சீர்கள் நான்கு உண்டாகும்.

ஈரசை வாய்பாடுகளின் இறுதியில காய் என்னும் வாய்பாடு சேரும்.

எ.கா. நேர் + நேர் + நேர் = தேமா+ காய் = தேமாங்காய்

| | |
|---|---|
| நேர் நேர் நேர் - தேமாங்காய் | காய்ச்சீர் - 4 |
| நிரை நேர் நேர் - புளிமாங்காய் | |
| நேர் நிரை நேர் - கூவிளங்காய் | |
| நிரை நிரை நேர் - கருவிளங்காய் | |

மேற்கூறிய நான்கும் 'நேரீற்று மூவசைச்சீர்' என்று அழைக்கப்படுகிறது. இச்சீர்கள் வெண்பாவுக்குரியவையாதலால் 'வெண்பாவுரிச்சீர்' எனவும் வழங்கப்பெறும்.

ஈரசைச்சீர்கள் ஒவ்வொன்றின் இறுதியிலும் 'நிரை' என்னும் அசையைச் சேர்த்தால் 'நிரை'ஈற்று மூவசைச் சீர்கள் நான்கு உண்டாகும். ஈரசை வாய்பாடுகளின் இறுதியில் கனி என்னும் வாய்பாடு சேரும்.

எ.கா. நேர் + நேர்+ நிரை – தேமா+ கனி = தேமாங்கனி

| | |
|---|---|
| நேர் நேர் நிரை – தேமாங்கனி | கனிச்சீர் |
| நிரை நேர் நிரை – புளிமாங்கனி | |
| நேர் நிரை நிரை - கூவிளங்கனி | |
| நிரை நிரை நிரை – கருவிளங்கனி | |

இவை நான்கும் 'நிரையீற்று மூவசைச்சீர்' என்று அழைக்கப்படுகிறது. இச்சீர்கள் வஞ்சிப்பாவுக்குரியதால்,'வஞ்சியுரிச்சீர்' என்றும் அழைக்கப்படுகிறது.

"மாவின் முன்னர் காய்கனி உண்டாயின்
வெண்பா வஞ்சி யுரிச்சீர் ஆமே"

**நாலசைச்சீர்:** மூவசைச்சீர் எட்டுடன், நேரசை நிரையசைகளைத் தனித்தனியாக இறுதியில் சேர்த்தால் நாலசைச்சீர் பதினாறு கிடைக்கும். இதனைப் 'பொதுச்சீர்' என்றும் வழங்குவர்.

நேரீற்றுப் பொதுச்சீர்,'பூச்சீர்' எனவும், நிரையீற்றுப் பொதுச்சீர் 'நிழற்சீர்' எனவும் வழங்கப்பெறும்.

**தளை**

- ❖ சீர்கள் ஒன்றோடொன்று கட்டுப்பட்டு நிற்கும் நிலை தளை எனப்படும். (தளை – கட்டு)
- ❖ நின்ற சீரின் ஈற்றசையும், வருஞ்சீரின் முதலசையும் ஒன்றியும் ஒன்றாமலும் அமைவது தளை எனப்படும்.
- ❖ செய்யுள் அடிகளில் ஒரு சீரின் இறுதி அசையும் அடுத்த சீரின் முதல் அசையும் ஒன்றியும் (நேர்+நேர்) (நிரை+நிரை) ஒன்றாமலும் (நேர்+நிரை, நிரை+நேர்) செய்யுளுக்கு உரிய ஓசை அமைப்பால் கட்டப்படும். இவ்வாறு இரண்டு சீர்கள் ஓசை அமைப்பால் கட்டப்படுவது தளை.
- ❖ தளை கூறும்பொழுது முதல்சீர் இறுதி அசையின் வாய்பாட்டோடு அடுத்த சீரின் முதல் அசையைச் சேர்த்துக் கூற வேண்டும்.

**ஏழு வகைகள்**

| | |
|---|---|
| 1. நேரொன்றாசிரியத்தளை | 2. நிரையொன்றாசிரியத்தளை |
| 3. இயற்சீர் வெண்டளை | 4. வெண்சீர் வெண்டளை |
| 5. கலித்தளை | 6. ஒன்றிய வஞ்சித்தளை |
| 7. ஒன்றா வஞ்சித்தளை | |

**1. நேரொன்றாசிரியத் தளை : (மா முன் நேர் வருவது)**

நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'மா' என முடிந்து வருஞ்சீரின் முதல் அசை நேர் எனத் தொடங்குவது நேரொன்றாசிரியத்தளை ஆகும்.

| | |
|---|---|
| வங்/கம் | தன்/னொடும் |
| நேர் + நேர் | நேர் + நிரை |

(தேமா) மா முன் நேர் வந்த நேரொன்றாசிரியத்தளை

**2. நிரையொன்றாசிரியத்தளை(விள முன் நிரை வருவது)**

நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'விளம்' என முடிந்து வருஞ்சீரின் முதல் அசை 'நிரை' எனத் தொடங்குவத நிரையொன்றாசிரியத்தளை.

| | |
|---|---|
| துளி/யொளி | விளக்/கின் |
| நிரை+நிரை | நிரை+நேர் |

(கருவிளம்) விள முன் நிரை வந்த நிரையொன்றாசிரியத்தளை. நேரொன்றாசிரியத் தளையும், நிரையொன்றாசிரியத்தளையும் ஆசிரியப்பாவுக்குரியவை.

"மாமுன் நேரும் விளமுன் நிரையும்
அமைவன ஆசிரி யத்தளை யாமே"

**3. இயற்சீர் வெண்டளை (மா முன் நிரையும், விள முன் நேரும் வருவது)**

நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'மா' என முடிந்து வருஞ்சீரின் முதல் அசை நிரை எனத் தொடங்குவதும், நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'விளம்' என முடிந்து. வஞ்சீரின் முதல் அசை நேர் எனத் தொடங்குவதும் இயற்சீர் வெண்டளை ஆகும்.

| | |
|---|---|
| ஊ/னைக் | குறித்/த |
| நேர் + நேர் | நிரை + நேர் |

(தே மா) மா முன் நிரை வந்த இயற்சீர் வெண்டளை

| | |
|---|---|
| நய/னொடு | நன்/றி |
| நிரை + நிரை | நேர் + நேர் |

(கருவிளம்) விள முன் நேர் வந்த இயற்சீர் வெண்டளை இயற்சீர் வெண்டளை ஆசிரியத்தளைக்கு மாறாக இருக்கும்.

"மாமுன் நிரையும் விளமுன் நேரும்
இயைந்து வருவதே இயற்சீர் வெண்டளை"

**4. வெண்சீர் வெண்டளை**

நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'காய்' என முடிந்து, வருஞ்சீரின் முதல் அசை 'நேர்' எனத் தொடங்குவது வெண்சீர் வெண்டளை ஆகும்.

| | |
|---|---|
| அகழ்/வா/ரைத் | தாங்/கும் |
| நிரை + நேர் +நேர் | நேர் + நேர் |

(புளிமாங்காய்) காய் முன் நேர் வந்த வெண்சீர் வெண்டளை. இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் வெண்பாவிற்குரியவை. வெண்பாவில் இவையன்றி வேறு தளைகள் வரா.

**5. கலித்தளை (காய் முன் நிரை வருவது)**

நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'காய்' என முடிந்து வருஞ்சீரின் முதல் அசை நிரை எனத் தொடங்குவது கலித்தளை ஆகும்.

| | |
|---|---|
| வா/னார்ந்/த | பொதி/யின்/மிசை |
| நேர் + நேர் + நேர் | நிரை + நேர் + நிரை |

தேமாங்காய் - காய் முன் நிரை வந்த கலித்தளை. கலித்தளை கலிப்பாவிற்குரியதாகும் கலித்தளை வெண்சீர் வெண்டளைக்கு மாறாக அமையும்.

**6. ஒன்றிய வஞ்சித்தளை**

நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'கனி' என முடிந்து வருஞ்சீரின் முதல் அசை 'நிரை' எனத் தொடங்குவது ஒன்றிய வஞ்சித் தளை ஆகும்.

| | |
|---|---|
| தண்/டா/மரைத் | தனி/மஷ்ர் |
| நேர் + நேர் + நிரை | நிரை + நிரை |

தேமாங்கனி – நிரை முன் நிரை – எனவே 'ஒன்றியது' கனி முன் நிரை வந்த ஒன்றிய வஞ்சித்தளை.

**7. ஒன்றா வஞ்சித்தளை**

நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'கனி' என முடிந்து வருஞ்சீரின் முதல் அசை 'நேர்' எனத் தொடங்குவது ஒன்றாத வஞ்சித்தளை ஆகும்.

| | |
|---|---|
| வண்/டோ/லிடும் | வண்/டமி/ழகம் |
| நேர் + நேர் + நிரை | நேர் + நிரை + நிரை |

தேமாங்கனி – 'நிரை நேர்' எனவே ஒன்றாதது. கனி முன் நேர் வந்த ஒன்றாத வஞ்சித்தளை.

ஒன்றிய வஞ்சித்தளையும் ஒன்றாத வஞ்சித்தளையும் வஞ்சிப்பாவுக்குரியன.

**நினைவிற்கொள்ள வேண்டியவை**

1. மா முன் நேர் - நேரொன்றாசிரியத்தளை
2. விள முன் நிரை - நிரையொன்றாசிரியத்தளை
3. மா முன் நிரை,விள முன் நேர்- இயற்சீர் வெண்டளை
4. காய் முன் நேர் - வெண்சீர் வெண்டளை
5. காய் முன் நிரை – கலித்தளை
6. கனி முன் நிரை – ஒன்றிய வஞ்சித்தளை
7. கனி முன் நேர் - ஒன்றாத வஞ்சித்தளை

**பாவும் தளையும்**

| | |
|---|---|
| **1. ஆசிரியப்பா–** | 1. நேரொன்றாசிரியத்தளை |
| | 2. நேரொன்றாசிரியத்தளை |
| | 3. இயற்சீர் வெண்டளை |
| **2. வெண்பா –** | 1. வெண்சீர் வெண்டளை |
| | 2. இயற்சீர் வெண்டளை |
| **3. கலிப்பா –** | 1. கலித்தளை |
| | 2. வெண்சீர் வெண்டளை |
| **4. வஞ்சிப்பா –** | 1. ஒன்றிய வஞ்சித்தளை |
| | 2. ஒன்றாத வஞ்சித்தளை |

**அலகிடுதல்:**

செய்யுள் அடிகளில் உள்ள சீர்களை நேரசை, நிரையசைகளாகப் பிரித்தலும், வாய்பாடு கூறுதலும், தளை குறித்தலும் அலகிடுதல் எனப்படும். அசை கணக்கிடுதலை அலகிடுதல் என்கிறோம்.

எ.கா. பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்
பெண்டகையால் பேரமர்க் கட்டு.

பண்/டறி/யேன் - நேர் நிரை நேர் - கூவிளங்காய்

கூற்/றென் - நேர் நேர் - தேமா

பத/னை - நிரை நேர் - புளிமா

இனி/யறிந/தேன் - நிரை நிரை நேர் – கருவிளங்காய்

பேண் /டகை/யால் - நேர் நிரை நேர் - கூவிளங்காய்

பேர/மர்க் - நேர் நிரை - கூவிளம்

கட் /டு - நேர் நேர் - நேர்பு - காசு

**தளை குறித்தல்**

1. பண்டறியேன் - கூற்/றென்
கூவிளங்காய் - நேர்-காய் முன் நேர் - வெண்சீர் வெண்டளை
2. கூற்றென் - பதனை
தேமா – நிரை-மா முன் நிரை-இயற்சீர் வெண்டளை
3. பதனை - இனி/யறிந்தேன்
புளிமா – நிரை-மா முன நிரை-இயற்சீர் வெண்டளை
4. இனியறிந்தேன் - பெண்∴டகையால்
கருவிளங்காய் - நேர்-காய் முன் நேர்-வெண்சீர் வெண்டளை
5. பெண்டகையால் - பே/ரன்ர்க்
கூவிளங்காய் - நேர்-காய் முன் நேர்-வெண்சீர் வெண்டளை
6. பேரமர்க் - கட்டு
கூவிளம் - நேர்-விள முன் நேர் - இயற்சீர் வெண்டளை

**அடி**

சீர்கள் பல தொடர்ந்து வந்து ஓர் அடியாக அமைந்து செய்யுளுக்கு உறுப்பாவது அடி எனப்படும். எ.கா. அரும்பொருள் யாதொன்றும் இல். (மூன்று சீர்களால் ஆன அடி)

**ஐந்து வகை**

**1. குறளடி:** இரண்டு சீர்களால் ஆன அடி
எ.கா. ஒண்சொல் காந்தள்

**2. சிந்தடி:** மூன்று சீர்களால் ஆன அடி
எ.கா. வல்லறிதல் வேந்தன் தொழில்.

வெண்பாவின் ஈற்றடி சிந்தடியாக இருக்கும்.

**3. அளவடி:** நான்கு சீர்களால் ஆன அடி அளவடி 'நேரடி' என்றும் அழைக்கப்படும்.
எ.கா. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
வெண்பா, கலிப்பா ஆகியவற்றில் அளவடி அமைந்து வரும்.

**4. நெடிலடி:** ஐந்து சீர்களால் ஆன அடி (நெடிலடி – நீண்ட அடி)
எ.கா. வையம் ஏழுடை மன்னவன் அவ்வுரை வழங்க

**5. கழிநெடிலடி:** ஐந்துக்கும் மேற்பட்ட சீர்களால் ஆன அடி (கழிநெடில் - மிக நீண்டது) ஓர் அடியில் ஆறு சீர்கள் முதல் பதினான்கு சீர்கள் வரை அமைந்திருக்கும்.

**எ.கா.** நின்றவூர்ப்பு பூச லன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த
-அறுசீர் கழிநெடிலடி

வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி
-எழுசீர் கழிநெடிலடி

நாட்டோடு சேராத தனிபோக உரிமை
நடவாதிங் கினியென்று நாமறிதல் பெருமை
-எண்சீர் கழிநெடிலடி

## 'பா' வகை

'பா' நான்கு வகைப்படும்

1. வெண்பா 2. ஆசிரியப்பா/அகவல் பா 3. கலிப்பா 4. வஞ்சிப்பா

## வெண்பா

**வெண்பாவின் பொது இலக்கணம்:**

1. வெண்பாவின் ஈற்றடி முச்சீர்களாகவும் , ஏனைய அடிகள் நான்கு சீர்களாகவும் இருக்கும்.
2. இயற்சீர் (மாச்சீர், விளச்சீர்), வெண்சீர் (காய்ச்சீர்) கலந்து வரம். பிற சீர்கள் வரா.
3. இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை கலந்து வரும். (வேறு தளைகள் வராது)
4. ஈற்றடியின் ஈற்றுச்சீர் நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகளில் ஒன்றைப் பெற்று முடியும்.
5. செப்பலோசை பெற்று வரும்.
6. இரண்டடி முதல் பன்னிரண்டு அடிகள் வரை வரும்.

**வெண்பா ஆறு வகைப்படும்.**

1. குறள் வெண்பா 2. நேரிசை வெண்பா
3. இன்னிசை வெண்பா 4. நேரிசை சிந்தியல் வெண்பா
5. இன்னிசை சிந்தியல் வெண்பா 6. பஃறொடை வெண்பா

## ஆசிரியப்பா

**ஆசிரியப்பாவின் பொது இலக்கணம்.**

1. அடிதோறும் நான்கு சீர்களைப் பெற்று வரும்.
2. பெரும்பாலும் ஈரசைச் சீர்களாகிய மாச்சீர், விளச்சீர் (ஆசிரிய உரிச்சீர்கள்) பெற்று வரும்.
3. கருவிளங்கனி, கூவிளங்கனி ஆகிய இரு வஞ்சியுரிச்சீர்களும் வராது.
4. நேரொன்றாசிரியத் தளையும், நிரையொன்றாசிரியத் தளையும் மிகுந்து வரும், பிற தளைகளும் கலந்து வரும்.
5. குறைந்தது மூன்றடிகள் கொண்டும், எண்ணப்படி மிகுந்தும் வரும்.
6. ஈற்றடியின் இறுதிச் சீர் ஏ,ஐ,ஓ,ஈ, ஆய், என் - என்னும் அசைகளும் ஒன்றைக் கொண்டு முடியும்.
   ஏகாரத்தால் முடிவதே சிறப்பாகும்.
7. அகவல் ஓசை பெற்று வரும் அகவல் ஓசை பெற்று வருவதால் **'அகவற்பா'** எனவும் பெயர் பெறும்.

**ஆசிரியப்பா நான்கு வகைப்படும்**

1. நேரிசை ஆசிரியப்பா 2. இணைக்குறள் ஆசிரியப்பா
3. நிலைமண்டில ஆசிரியப்பா 4. அடிமறி மண்டில ஆசிரியப்பா

## கலிப்பா

**பொது இலக்கணம்:**

1. நாற்சீர் கொண்ட அளவடி உடையதாய் இருக்கும்.
2. வெண்சீர் வெண்டளை அதிகம் பெற்று, மாச்சீரும், விளங்கனிச்சீரும் பெறாமல் ஏனைய சீர்கள் சிறுபான்மையாகக் கொண்டு வரும்.
3. கலித்தளையும், பிற தளையும் பெற்று வரும்.
4. துள்ளலோசை பயின்று வரும.
5. மூன்றடிச் சிறுமை உடையது.
6. தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறு உறுப்புகளுள் ஏற்பன கொண்டு முடிந்து வரும்.

## வஞ்சிப்பா

**பொது இலக்கணம்:**

1. இருசீர் அடிகளும் முச்சீர் அடிகளும் கலந்து வரும்
2. காய்ச்சீரும், கனிச்சீரும் மிகுந்திருக்கும்.
3. வஞ்சித்தளைகள் மிகுந்தும் ஏனைய தளைகள் குறைந்தும் வரும்
4. தனிச்சொல் ஆசிரியச் சுரிதகம் வரும்.
5. மூன்று அடிகள் முதல் பல அடிகள் வரை வரும்.
6. தூங்கல் ஓசை பயின்று வரும்.

## மோனை, எதுகை, இயைபு

**மோனைத்தொடை:**

முதல் எழுத்து ஒன்றி வருவது

ஓர் எழுத்துக்கு மோனையாக அதன் இன எழுத்தும் வரலாம்.

**இன எழுத்துகள்:**

அ, ஆ – ஒன்றுக்கு ஒன்று இனம்

இ,ஈ, எ, ஏ, உ, ஊ, ஒ, ஓ – ஒன்றுக்கொன்று இனம்.

**வகைகள்:**

**அடிமோனை:**

செய்யுள் முதல் அடியின் முதல் எழுத்து அடுத்த அடிகளின் முதல் எழுத்தாக வருவது அடிமோனை ஆகும்.
இன எழுத்தும் மோனையாக அமையும்.

**எ.கா.:** நாணால் உயிரைத் துறப்பார் …….
நாண் துறவார் ……

**சீர்மோனை:**

**1.இணை மோனை:**

அளவடியில் 1,2 சீர்கள் முதல் எழுத்து ஒன்றி வருவது
இன எழுத்தும் மோனையாக அமையும்
எ.கா: கமழத் கமழத் தமிழிசை பாடினாள்.

**2. பொழிப்பு மோனை:**

அளவடியில் 1, 3 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது
எ.கா.: நண்பற்றா ராகி நயமில் செய்தார்க்கும்

**3. ஒருஉ மோனை**

அளவடியில் 1,4 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது.
எ.கா: அணியன்றோ நானுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்

**4. கூழை மோனை**

அளவடியில் 1, 2, 3 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது.
எ.கா.: எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்

**5. மேற்கதுவாய் மோனை**

அளவடியில் 1, 3, 4 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது.
எ.கா. பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்

**6. கீழ்க்கதுவாய் மோனை**

அளவடியில் 1, 2, 4 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது
எ.கா.: அவிர்மதி அனைய திருநுதல் அரிவை

**7. முற்று மோனை:**

அளவடியில் 1, 2, 3, 4 சீர்களிலும் முதல் எழுத்து ஒன்றி வருவது முற்றுமோனை எனப்படும்.
அனைத்துச் சீர்களிலும் மோனை இருக்கும்.
எ.கா. கண்ணும் கருத்துமாய் கலைகளைக் கற்றான்

**எதுகைத் தொடை**

இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகை.

**அடி எதுகை:**

செய்யுள் அடிகளின் முதல் எழுத்து அளவொத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது அடிஎதுகை எனப்படும்.
எ.கா.: ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரை பொன் ……….

**சீர் எதுகை**

**1. இணை எதுகை:**

அளவடியில் 1, 2 சீர்களில் முதல் எழுத்து அளவொத்திருக்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது.
எ.கா.: காற்றாரைக் கற்றது உணரார்;;

**2. பொழிப்பு எதுகை:**

அளவடியில் 1, 3 சீர்களில் முதல் எழுத்து அளவொத்திருக்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது.
எ.கா.: வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வகை

**3. ஒரூஉ எதுகை: (1, 4)**

**எ.கா.:** ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்கு

**4. கூழை எதுகை: (1, 2, 3)**

**எ.கா.:** நன்நிற மென்முகை மின்னிடை வருத்தி

**5. மேற்கதுவாய் எதுகை: (1, 3, 4)**

**எ.கா.:** என்னையும் இடுக்கண் துன்னுவித் தின்னிசை

**6. கீழ்க்கதுவாய் எதுகை: (1, 2, 4)**

**எ.கா.:** இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்

**7. முற்று எதுகை: (1, 2, 3, 4)**

(அனைத்துச் சீர்களிலும் எதுகை இருக்கும்)

**எ.கா.:** துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு

### இயைபுத்தொடை

செய்யுளின் அடிகளிலும், சீர்களிலும இறுதி எழுத்தோ, அசையோ, சீரோ ஒன்றி வருவது இயைபுத்தொடை எனப்படும்.

சீர் இயைபுத் தொடை வகைகள் காணும்பொழுது அளவடியில் இறுதிச்சீரே முதற்சீராகக் கொண்டு வழங்கப்படும்.

**எ.கா.:**

வாழிய தேவ பிரான்
எங்கும் நிறைந்த பிரான் **- அடி இயைபு**

பழமணல் மாற்றுமின் புதுமணல் பரப்புமின் **- பொழிப்பு இயைபு**

அன்புக்கோர் உரைக்கல்லாய் அருளுக்கோர் நிலையில்லாய் - **பொழிப்பு இயைபு**

## 5. அணி இலக்கணம்

அணி என்றால் அழகு என்பது பொருள். புலவர்கள் செய்யுளை அழகுபடுத்துவதை,'அணி' என்றே வழங்கினர். அவ்வாறான அணிகள் இயல்பு நவிற்சி, உயர்வு நவிற்சி முதலியன.

### இயல்பு நவிற்சியணி

ஒரு பொருளின் இயல்பை உள்ளது உள்ளவாறு கூறுவது இயல்பு நவிற்சியணி எனப்படும்.

தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்
ஆய வெள்வளை வாய்விட் டரற்றவும்
தேயும் நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆய மங்கையர் அங்கை வருந்துவார்.

இப்பாடலில் தயிர் கடையும் ஆய மங்கையரின் தன்மை உள்ளவாறே அழகுபடச் சொல்லப்படுவதைக் காணலாம்.

### உயர்வுநவிற்சியணி

ஒருபொருளின் தன்மையை மிகைப்படுத்திக் கூறுவது உயர்வு நவிற்சியணி எனப்படும். உயரமான மலையை 'விண்ணைத் தொடும் மலை என வருணித்தல்' உயரமான வைக்கோல் போரை 'வானை முட்டும் வைக்கோல்போர்' என உயர்த்திக் கூறுதல்.

### உவமையணி

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

ஊர் நடுவே உள்ள நீர்நிறைந்த குளம் நிரம்பினாற்போன்றதே உலக உயிர்களை யெல்லாம் விரும்பி உதவிசெய்யும் பேரறிவு உடையானிடம் சேர்ந்த செல்வம்.

அதில், ஊருணி நீர்நிறைதல் என்பது உவமை. ஊலகவாம் பேரறிவாளன் திரு என்பத உவமேயம். அற்று என்பது உவமஉருபு.

இவ்வாறு உவமை, உவமேயம் இவ்விரண்டையும் இணைக்கும் உவமஉருபு வெளிப்படுமாறு வரப் பாடுவது உவமையணி ஆகும்.

### எடுத்துக்காட்டு உவமையணி

புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

ஒருவனது உடல் தூய்மை நீரில் குளிப்பதால் புலப்படும். உண்மையைப் பேசுவதால், உள்ளத்தின் தூய்மை புலப்படும். இப்பாடலில், உடம்பின் தூய்மை நீரால் அமையும் என்பது உவமை. உள்ளத்தின் தூய்மை உண்மை பேசுவதால் உண்டாகும் என்பது உவமேயம். இரண்டையும் இணைக்கும் உவம உருபு இல்லை.

இப்பாடலில் உவமை, உவமேயம் இரண்டும் தனித்தனியாக எடுத்துக்காட்டி இடையில் உவம உருபு மறையுமாறு அமைக்கப்பட்டுள்ளது. எனவே, இப்பாடல் எடுத்துக்காட்டு உவமை அணி.

### உருவக அணி

இன்சொல் விளைநிலனா ஈதலே வித்தாக
வன்சொல் களைகட்டு வாய்மை எருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்.

இப்பாடலில் இன்சொல்-விளைநிலம்,ஈதல்-விதை, வன்சொல்-களை, வாய்மை-உரம்(எரு), அன்பு-நீர், அறம்-கதிர் என உருவகிக்கப் பெற்றுள்ளதால், இப்பாடல் உருவக அணியாகும்.

இவ்வாறு உவமானம் வேறு, உவமேயம் வேறு எனத் தோன்றாத வகையில், உவமானத்தின் இயல்புகளை உவமேயத்தின்மேல் ஏற்றிக் கூறுவது உருவக அணியாகும்.

மதிமுகம் - மதிபோன்ற முகம் -உவமை
முகமதி – முகம் ஆகிய மதி – உருவகம்

### ஏகதேச உருவக அணி

கவிஞர், தாம் எடுத்துக் கொண்ட பல பொருள்களை உருவகப்படுத்திக் கூறும்போது ஒன்றை மட்டும் உருவகப்படுத்தி, அதனோடு தொடர்புடைய மற்றொன்றை உருவகப்படுத்தாமல் விடுவது ஏகதேச உருவக அணி எனப்படும்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார் - குறள், 10

இதில் பிறவியைக் கடலாக உருவகப்படுத்திவிட்டு, அதைக் கடக்க உதவும் இறைவனடியைத் தெப்பமாக உருவகப்படுத்தாமையால் இஃது ஏகதேச உருவக அணி ஆயிற்று.

### இல்பொருளுவமையணி

உலகில் இல்லாத பொருளை ஒன்றிற்கு உவமையாக்கிக் கூறுவது இல்பொருள் உவமை அணி எனப்படும்.

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று - குறள், 78

இக்குறட்பாவைப் படித்துப் பாருங்கள். உள்ளத்தில் அன்பில்லாத ஒருவர் குடும்ப வாழ்க்கை நடத்துவது என்பது. பாலை நிலத்தில், பட்டுப்போன மரம் தளிர்விட்டு வளர்வது போன்றது. திருவள்ளுவர். இக்குறட்பாவில் அன்பில்லாதவன் வாழ்க்கை, பாலைநிலத்தில் பட்டுப்போன மரம் தளிர்விட்டு வளர்வதற்கு ஒப்பானது என இல்லாத பொருளை உவமித்துக் கூறுகிறார்.

இவ்வாறு புலவர் உலகில் இயல்பாக இல்லாத பொருளை உவமையாக்கிக் கூறுவது இல்பொருளுவமை அணி ஆகும்.

### பிறிதுமொழிதல் அணி

புலவன், தான் கருதிய பொருளை நேரடியாகச் சொல்லாமல், அதனோடு தொடர்பு உடையனவற்றைச் சொல்லி விளங்கவைப்பது பிறிது மொழிதல் அணி ஆகும்.

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின் - குறள், 475

இக்குறட்பாவில், மயிலிறகு மிகவும் மென்மையானதாக இருப்பினும், அதனை அளவுக்கு அதிகமாக ஏற்றினால்

வண்டியின் வலிய அச்சும் முரிந்துவிடும் என்பது இக்குறளின் பொருளாகும். பகைவர்கள், எளியவர்கள் ஆயினும் மிகுதியாக்கிக் கொள்ளல் கூடாது. என்ற கருத்தைப் பெற வைக்கிறார்.

இதன் மூலமாக வலிமை குறைந்த அரசர் பலர் கூடிப் போரிட்டால் 'பெரும்படையுடைய பேரரசரும், எளிதில் வெல்லப்படுவர்' என்னும் கருத்தை உட்பொருள் தோன்ற விளக்கியுள்ளார். எனவே, இப்பாடலில் பிறிதுமொழிதலணி அமைந்துள்ளது.

**வேற்றுமையணி**

செய்யுளில் இருபொருளுக்கு இடையே உள்ள ஒப்புமையைக் கூறிப் பின்னர் அவற்றை வேறுபடுத்திக் காட்டுவது வேற்றுமையணி ஆகும்.

தீயினால் சுட்ட புண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு. - குறள், 129

தீயினால் சுடுவதும், நாவினால் தீயசொற்களைக் கொண்டு சுடுவதும் என்பது ஒற்றுமை, தீயினால் சுட்டது ஆறும், நாவினால் சொன்னது ஆறாது என்பது வேற்றுமையாகும். எனவே, இப்பாடலில் வேற்றுமையணி இடம் பெற்றுள்ளது.

**நிரல்நிரையணி**

சொல்லையும் பொருளையும் வரிசையாக (நிரலாக) நிறுத்தி, நேரே பொருள் கொள்வது நிரல்நிறை அணி யாகும்.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. - குறள், 45

இக்குறட்பாவைப் படித்துப் பாருங்கள்.

'இல்வாழ்க்கையின் பண்பு எனப்படுவது அன்பு காட்டுவது. இல்வாழ்க்கையின் பயன் எனப்படுவது அறம்செய்தல் என்பதாகும்'' என்பது இக்குறட்பாவின் கருத்து.

இக்குறட்பாவில் அன்பும் அறனும் முதலடியில் அமைந்துள்ளன. அடுத்த அடியில் அச்சொற்களோடு முறையாகப் பொருந்தும் வரிசைப்படி பண்பு, பயன் என்னும் சொற்கள் அமைந்துள்ளன. எனவே, இது நிரல் நிரையணி.

**தற்குறிப்பேற்ற அணி**

இயல்பாக நிகழும் நிகழ்ச்சியின்மீது கவிஞர் தம் குறிப்பினை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்ற அணி. (தன் + குறிப்பு + ஏற்றம் + அணி)

தையல் துயர்க்குத் தரியாது தம்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய் - வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்.

கோழிகள் விடியற்காலையில் கூவுதல் இயல்பான நிகழ்ச்சி. ஆனால் கவிஞர், காட்டில் நள்ளிரவில் கணவனைப் பிரிந்து வருத்தமுற்ற தமயந்தியின் துயரைப் போக்க, இருளை நீக்குவதற்குத் தேரேறி விரைந்து வருமாறு ஞாயிற்றைக் கோழிக் கூட்டங்கள் கூவி அழைப்பதாகத் தன் குறிப்பை ஏற்றிக் கூறியுள்ளார். எனவே, தற்குறிப்பேற்ற அணி.

**வஞ்சப்புகழ்ச்சி அணி**

புகழ்வதுபோலப் பழிப்பதும், பழிப்பதுபோலப் புகழ்வதும் வஞ்சப்புகழ்ச்சி அணி எனப்படும்.

தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்.

இப்பாடலில், தீயவர்களைத் தேவர்களுக்கு இணையாகப் புகழ்ந்து கூறுவதுபோலக் கூறித் தீயவர்கள் தம் மனம்போன போக்கில் தீய செயல்களைச் செய்து அழிவார்கள் எனப் பழித்துக் கூறப்பட்டுள்ளது.

கல்லால் அடித்ததற்கோ காலால் உதைத்ததற்கோ
வில்லால் அடித்ததற்கோ வெட்கினீர் - சொல்வீரால்
மஞ்சுதனைச் சூழும் மதிலானைக் காவாரே
நஞ்சுதனைத் தின்றதென் முன்.

இப்பாடலில், திருப்பாற்கடலைக் கடைந்தபோது உண்டாகிய நஞ்சினைச் சிவபெருமான் உண்டு தேவர்களைக் காத்தார் என்பது புராணக் கதை. இதனைக் காளமேகப் புலவர் சிறிது மாற்றி ஒருவன் கல்லால் அடித்ததற்காகவும், இன்னொருவன் காலால் உதைத்ததற்காகவும், வேறொருவன் வில்லால் அடித்ததற்காகவும் வெட்கமடைந்து உயிர்வாழ விரும்பாமல் நஞ்சை உண்டார் எனப் பழிப்பதுபோல் சிவபெருமானைப் புகழ்ந்துள்ளார். எனவே, இது வஞ்சப்புகழ்ச்சி அணி ஆயிற்று.

**இரட்டுறமொழிதல் அணி**

ஒருசொல் இருபொருள்பட அமைந்து வருதல் இரட்டுறமொழிதல் எனப்படும். இதனைச் சிலேடை எனவும் வழங்குவர். இது செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை என இருவகைப்படும்.

**அ) செம்மொழிச் சிலேடை**

ஒரு செய்யுளில் ஒரு சொல் பிரிவுபடாமல் நின்று, ஒன்றுக்கு மேற்பட்ட பொருளைத் தருவது செம்மொழிச் சிலேடை எனப்படும்.

ஆடிக் குடத்தடையும் ஆடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும் - ஓடிமண்டை
பற்றின் பரபரெனும் பாரில்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம் பெள்ளெனவே வோது.

இப்பாடலில் பாம்பு, எள் ஆகிய இரண்டிற்கும் சிலேடை கூறப்பட்டுள்ளது. ஆடிக் குடத்தடையும் ஆடும்போ தேயிரையும் எனும் முதலடி, படமெடுத்து ஆடியவின் குடத்துள் சென்றடையும், படமெடுத்தாடும்போது, இரைச்சலிடும் எனப் பாம்பிற்கும்,

செக்காடியபின் எடுத்த எண்ணெயைக் குடத்தில் ஊற்றுவர். செக்காடும்போது இரைச்சல் உண்டாகும் என எள்ளிற்கும் சிலேடையாக வந்துள்ளது.

இப்பாடலில் சொற்கள் பிரிவில்லாமல் இருபொருள்கள் தந்தன. எனவே, இது செம்மொழிச் சிலேடை ஆயிற்று.

**ஆ)பிரிமொழிச் சிலேடை**

ஒரு சொல் தனித்து நின்று ஒருபொருளையும், அதுவே பிரிந்து நின்று வேறொரு பொருளையும் தருமாறு அமைத்துப் பாடுவது, பிரிமொழிச் சிலேடை ஆகும்.

ஏற்றுமின் விளக்கை இருளகலவே என்றால் விளக்கை ஏற்று என்றும், ஏற்று மின் விளக்கை இருளகலவே எனப் பிரித்துப் படித்தால், மின்விளக்கை ஏற்றுவீர் எனவும் வேறொரு பொருளும் தருகிறது. எனவே, இது பிரிமொழிச் சிலேடை.

**பின்வருநிலையணி**

செய்யுளில் முன்னர் வந்த சொல்லோ, பொருளோ, சொல்லும் பொருளோ மீண்டும் மீண்டும் வந்து அழகு சேர்க்கும். அவை, சொல் பின்வருநிலையணி, பொருள் பின்வருநிலையணி, சொற்பொருள் பின்வருநிலையணி என மூவகைப்படும்.

**அ) சொல்பின்வரு நிலையணி**

செய்யுளில் முன்னர் வந்த சொல், மீண்டும் மீண்டும் வந்து வெவ்வேறு பொருளைத் தருவது, சொல்பின்வருநிலை அணி.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.

இக்குறள்பாவில் துப்பு என்னும் ஒரேசொல் உண்பவர், உணவு, உண்ணும் பொருள் எனப் பல்வேறு பொருள்களில் வந்துள்ளது. எனவே, இது சொல்பின்வருநிலையணி.

**ஆ)பொருள் பின்வருநிலையணி**

செய்யுளில் ஒரே பொருள்தரும் பல சொற்கள் வருவது, பொருள் பின்வருநிலை அணி.

அவிழ்ந்தன தோன்றி அலர்ந்தன காயா
நெகிழ்ந்தன நேர்முகை முல்லை — மகிழ்ந்திதழ்

விண்டன கொன்றை விரிந்த கருவிளை
கொண்டன காந்தள் குலை.

இப்பாடலில் மலர்தல் என்னும் ஒரு பொருளில் அவிழ்தல், அலர்தல், நெகிழ்தல், விள்ளல், விரிதல் ஆகிய சொற்கள் வந்துள்ளன. எனவே, இது பொருள் பின்வருநிலையணி.

**இ)சொற்பொருள் பின்வருநிலையணி**

செய்யுளில் முன்னர் வந்த சொல், மீண்டும் மீண்டும் வந்து ஒரே பொருளைத் தருவது, சொற்பொருள் பின்வருநிலை அணி.

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

இப்பாடலில், தீய என்னும் சொல் தீமை என்னும் ஒரே பொருளில் பலமுறை வந்துள்ளது. எனவே, இது சொற்பொருள் பின்வருநிலையணி.

**பிறிதுமொழிதலணி**

உவமையைக் கூறிப் பொருளைப் பெற வைப்பது பிறிதுமொழிதல் அணி ஆகும்.

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்

மென்மையான மயில்தோகையே ஆயினும், அதனை அளவுக்கு விஞ்சி வண்டியிலேற்றின் அச்சு ஒடிந்துவிடும் என்பது உவமை.

பகைவர்கள் தனித்தனியே நோக்கும்போது மிகச் சிறியராயினும் ஒன்றுகூடின், தனிப்பட்ட பகை மன்னன் எவ்வளவு வலிமை உடையவனாயினும் அவனை எளிதில் வென்றுவிடுவர் என்பது இதனால் பெறப்படும் பொருள். எனவே, இது பிறிதுமொழிதலணி.

**உவமை அணி**

ஒரு பொருளைச் சிறப்பித்துக் கூற விரும்பும் புலவர் சிறந்த எடுத்துக்காட்டு ஒன்றைக் கூறி அதனை விளக்குகிறார். அணியிலக்கணத்தில், இவ்வாறு சிறப்பிக்கப்படும் பொருள் உவமேயம் எனப்படும். அதனைச் சிறப்பிக்கப் பயன்பட்ட எடுத்துக்காட்டு, உவமானம் எனப்படும். ஒரு பாடலில் எடுத்துக்காட்டான உவமானம், பொருளான உவமேயம் இவற்றோடு போல என்னும் பொருள் தரும் உவம உருபு, உவமானத்திற்கும் உவமேயத்திற்கும் இடையே காணப்படும் பொதுத் தன்மை ஆகிய நான்கும் இடம்பெற வேண்டும். அப்பொழுதுதான் அப்பாடல் உவமை அணியில் அமைந்ததாகும். ஆக உவமை அணியில், 1. உவமானம், 2. உவமேயம் 3. உவம உருபு
4.பொதுத்தன்மை என நான்கு கூறுகள் இடம்பெற வேண்டும். பொதுத் தன்மை இல்லாமல் மற்ற மூன்று கூறுகளைப் பெற்றிருந்தாலும் அது உவமை அணியாகாது.

பொதுத் தன்மை மூன்று அமையலாம் என அணி இலக்கண நூலார் கண்டறிந்துள்ளனர். அவை: 1.பண்பு 2. தொழில் 3. பயன் என்பனவாகும். இவற்றின் அடிப்படையில் உவமை அணி மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை

1. பண்பு உவமை அணி 2. தொழில் உவமை அணி
3. பயன் உவமை அணி என்பனவாகும். ஊவமை அணியின் வகைதான் மூன்றே தவிர இம்மூன்றும் ஒரே பாடலிலும் இடம் பெறலாம். தனித்தனிப் பாடல்களிலும் இடம்பெறலாம்.

(எ-டு) ‘பால்போலும் இன்சொல் பவளம் போல் செந்துவர்வாய்
சேல்போல் பிறழும் திருநெடுங்கண் - மேலாம
புயல்போல் கொடைக்கைப் புனல்நாடன் கொல்லி
அயல்போலும் வாழ்வ தவர்’

என்னும் பாடலில் உவமை அணியின் மூன்று பிரிவுகளையும் காணலாம்.

‘பவளம் போல் செந்துவர் வாய்’ என்பதில், பவளம் - உவமானம், வாய் - உவமேயம், போல் - உவம உருபு, சிவந்த வண்ணம் பொதுத் தன்மை. வண்ணம் பண்பாதலின் இது பண்பு உவமை.

‘சேல்போல் பிறழும் திருநெடுங்கண்’ என்பதில், சேல்- உவமானம், கண் - உவமேயம், போல் - உவம உருபு, பிறழுதல் - பொதுத் தன்மை. பிறழுதல் தொழில் ஆதலின் இது தொழில் உவமை.

‘புயல் போல் கொடைக்கைப் புனல் நாடன்’ என்பதில், புயல் என்னும் மேகம் உவமானம், கைப் புனல் நாடன் - உவமேயம், போல் - உவம உருபு, கொடை — பொதுத் தன்மை. மழை, அதன் பயன் நோக்கி இங்கு உவமிக்கப்படுவதால் இது பயன் உவமை.

‘பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்ந்
தொப்புமை தோன்றச் செப்புவதுமை’ (தண்டி)

**எடுத்துக்காட்டு உவமை அணி**

உவமானம் ஒரு தொடராகவும், உவமேயம் ஒரு தொடராகவும் அமைய இடையில் உவம உருபு மறைந்து நின்று, பொதுத் தன்மை தோன்ற விளங்குவது எடுத்துக்காட்டு உவமை அணி ஆகும்.

‘அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
புகவன் முதற்றே உலகு’ (குறள் 1)

என்னும் திருக்குறளின் பொருள்,‘எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை முதலாகப் பெற்றுள்ளமை போல உலகம்.
ஆதிபகவனை முதலாக உடையது’ என்பதாகும்.
‘எழுத்தெல்லாம் அகர முதல’ என்னும் தொடர் உவமானம்.
‘உலகு ஆதி பகவன் முதற்றே’ என்னும் தொடர் உவமேயம். முதலாக விளங்குதல் என்பது பொதுத் தன்மை உவம உருபு போல என்பது வெளிப்படத் தோன்றாமல் அப்பொருள் தோன்ற இடம் அளித்துள்ளமை காண்க. அதனால் இப்பாடல் எடுத்துக்காட்டு உவமை அணியின் பாற்படும். (உவமானம்- உவமை, உவமேயம் - பொருள்)

**இல்பொருள் உவமை அணி**

உலகில எங்கும் காணமுடியாத அல்லது இல்லாத பொருளை உவமானமாகக் கொள்ளுதல் இல்பொருள் உவமை அணி.

‘கருமுகில் தாமரைக் காடு பூத்துநீடு
இருசுடர் இருபுறத் தேந்தி ஏந்தலர்த்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோல் கலுழன்மேல் வந்து தோன்றினான்’.

என்னும் கம்பராமாயணப் பாடலின் பொருள்,‘கார்மேகம் ஒன்று தாமரைக் காடு பூத்து, இருபுறமும் சந்திரன் சூரியரைப் ஏந்திக் குன்றின் மேலேறி வருவதைப் போலக் கருட வாகனத்தின் மேல் இராமன் வந்து தோன்றினான் என்பது ஆகும். இதில் கார்மேகம் ஒன்று தாமரைக் காடு பூத்து இருபுறமும் சந்திரன், சூரியரை ஏந்திக் கார்மேகம் ஒன்று தாமரைக் காடு பூத்து இருபுறமும் சந்திரன், சூரியரை ஏந்திக் குன்றின் மேல் வருவது என்பது எங்கும் காண இயலாத, காட்சி ஆகும். எனவே இது இல்பொருள் உவமை ஆயிற்று. இதனைத் தண்டியலங்காரம் அபூத உவமை அணி எனக் கூறும்.

**முற்றுருவகம்**

உவமானம் உவமேயம் இரண்டும் தனித்தனியாக நின்று பொருள் தருவது உவமை அணி என்றால், உவமானம் வேறு உவமேயம் வேறு என்னும் நிலை இல்லாமல் இரண்டும் ஒன்று எனக் காட்டுவது உருவகம் ஆகும். இதில் ஒரு பகுதியை உருவகப்படுத்துவதும் உண்டு. ஒரு பகுதி எனப்பொரள்படும் வடமொழிச் சொல்லான ஏகதேசம் என்னும் சொல்லால் அதனை

ஏகதேச உருவக அணி என்பர். அவ்வாறு இல்லாமல் ஒரு பொருளின் அனைத்துப் பகுதிகளையும் உருவகப்படுத்திக் கூறுவது முற்றுருவகம் ஆகும்.

'நற்குணமு நாற்படையா ஐம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா — வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை அரசு'

என்னும் நளவெண்பாச் செய்யுள் ஒரு நாட்டின் படை முதலிய உறுப்புகளைத் தமயந்தியின் உறுப்புகளோடு முழுமையாக உருவகப்படுத்தியுள்ளமையால் இது முற்றுருவகம் ஆகிறது.

**சொல்பின்வருநிலை அணி**

ஒரு செய்யுளில் வந்த சொல்லே பல முறை திரும்பத் திரும்ப வந்து வெவ்வேறு பொருள் தருமாயின் சொல் பின்வருநிலை அணி எனப்படும்.

'பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்' (குறள் 751)

என்னும் திருக்குறளில் பொருள் என்னும் சொல் நான்கு முறை வந்துள்ளது. முதல் இரண்டு இடங்களில் தகுதி அல்லது மதிப்பு என்னும் கருத்திலும் பின் இரண்டு இடங்களில் செல்வம் என்னும் கருத்திலும் அச்சொல் இடம் பெற்றுள்ளது. சொல் மட்டும் பலமுறை வந்து அச்சொல்லிற்கான பொருள் வெவ்வேறாக இருப்பதால் இச்செய்யுளின் அணி 'சொல்பின் விருநிலையணி' ஆயிற்று.

**பொருள்பின்வருநிலை அணி**

ஒரு பொருள் குறித்த பல சொற்கள் ஒரு செய்யுளில் இடம் பெறுவது பொருள் பின்வருநிலைஅணி ஆகும்.

'ஆறுபாய் அரவம், மள்ள ராலைபாய் அமலை, ஆலைச்
சாறுபாய் ஒசை, வேலைச் சங்குவாய் பொங்கும் ஓதை
ஏறுபாய் தமரம், நீரிலெருமைபாய் துழனி, இன்ன
மாறுமா றாகித் தம்மின் மயங்குமா மருத வேலி'

என்னும் கம்பராமாயணப் பாடலில், ஒலி என்னும் பொருள்படும் சொற்களான அரவம், அமலை, ஓசை, ஓதை, தமரம், துழனி ஆகியன இடம் பெற்றுள்ளன. இதனால் இச்செய்யுளில் இடம்பெற்றுள்ள அணி 'பொருள் பின்வருநிலை அணி' ஆகும்.

**சொற்பொருள்பின்வருநிலை அணி**

செய்யுளில் இடம் பெறும் ஒரு சொல் அதே பொருளில் பலமுறை பயின்று வருதல் சொற்பொருள் நிலை அணி எனப்படும்.

'நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்' (குறள் 12)

என்னும் திருக்குறளில் நாடி என்னும் சொல் அறிந்து என்னும் பொருளில் மூன்று முறை வந்துள்ளது. இதனால் இக்குறளில் இடம் பெற்றுள்ள அணி சொற்பொருள் பின்வருநிலை ஆகும்.

இம்மூன்று பின்வருநிலை அணிகளைத் தண்டியலங்காரம் ஒரே நூற்பாவில் குறிப்பிடுகிறது.

**பிறிதுமொழிதலணி**

பிறிது மொழிதலணியைத் தண்டியலங்காரம் ஒட்டணி எனக் குறிப்பிடுகிறது. நுவலா நுவற்சி, சுருங்கச் சொல்லல், தொகைமொழி, உவமப்போலி என்னும் பெயர்களாலும் இதனைக் குறிப்பிடுவர்.

புலவர் தாம் கூறக் கருதிய பொருளை நேரடியாகக் கூறாமல், அதனை ஓர் எடுத்துக்காட்டின் வழிக் குறிப்பாக உணர்த்துவது பிறிதுமொழிதல் அணி எனப்படும். இதனைச் சுருக்கமாக 'உவமானத்தைக் கூறி உவமேயத்தை விளங்கவைப்பது' எனலாம்.

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்

'வண்டியில் ஓர் அளவுக்குமேல், மென்மையான மயில் இறகை ஏற்றினால் அவ்வண்டியின் அச்சு முறிந்து போகும்' என்பதே இக்குறளின் நேரடியான கருத்து. வண்டியின் பாரம் ஏற்றுவதை விளக்குவதற்காக இக்குறள் எழுதப்படவில்லை. 'படைவலிமை மிக்க அரசனாக இருந்தாலும் தன் தகுதிக்கு மீறிய செயலில் ஈடுபட்டால் அழிந்து போவான் என்பதே உணர்த்த விரும்பிய கருத்து. அதற்கான எடுத்துக்காட்டே பாடலாக அமைந்துள்ளது. இவ்வாறு உவமையை மட்டும் கூறிப் பாடல் புனைவது பிறிது மொழிதல் அணி எனப்படும்.

'கருதிய பொருள் தொகுத்து அது புலப்படுத்தற்கு
ஒத்ததொன்று உரைப்பின் அஃது ஒட்டென மொழிப'

**தற்குறிப்பேற்ற அணி**

இயற்கையில், எப்பொழுதும் நடக்கும் நிகழ்ச்சி ஒன்றின்மேல், புலவர் தாம் உணர்த்த விரும்பிய குறிப்பை ஏற்றிக் கூறுதல், தற்குறிப்பேற்ற அணி எனப்படும்.

(எ-டு) 'போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி
'வாரல்' என் பனபோல் மறுத்துக்கை காட்ட'

இவ்வடிகள் சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ளன. கண்ணகியும் கோவலனும் மதுரைமா நகருக்குள் செல்லத் தொடங்கினர். மதுரைக்குள் சென்றால் கோவலன் கொலை செய்யப்படுவான் என்பதை அறிந்தனவாம் கோட்டை மீதிருந்த கொடிகள். அவர்களுக்கு நடக்க இருந்த துன்பத்தை அறிந்த அக்கொடிகள் அவர்களை மாநகருள் வர வேண்டாம் என்பது போலக் கை அசைத்துத் தடுத்தனவாம். இவ்வாறு புலவர் கூறியுள்ளார். ஆனால் காற்று வீசுவதால் கொடிகள் அசைந்தன என்பதே உண்மையில் நடந்த நிகழ்ச்சி. அவ்வியற்கை நிகழ்ச்சியைத் தம் கருத்தை வெளிப்படுத்தப் புலவர் பயன்படுத்திக் கொண்டார். இவ்வாறு பாடும் அணி தற்குறிப்பேற்ற அணி எனப்படும்.

'பெயர்பொருள் அல்பொருள் எனவிரு பொருளினும்
இயல்பின் விளைதிறன் அன்றி அயலொன்று
தான்குறித்து ஏற்றுதல் தற்குறிப் பேற்றம்'

**மாறுபடு புகழ்நிலை அணி**

'தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்'

திருவள்ளுவர் கயவர்களின் செயலலைப் பார்க்கிறார். அவர்கள் எந்த விதி முறைக்கும் அடங்காமல் தாம் விரும்பியவற்றையெல்லாம் செய்கின்றனர். தேவர் என்னும் தெய்வ உலகத்தைச் சேர்ந்தவர்கள் தாம் அவ்வாறு நடப்பார்கள் எனக் கேள்விப்பட்ட வள்ளுவர் இக்கயவர்களை நில உலகத் தேவர்கள் எனக் குறிப்பிட்டுப் புகழ்வது போல் பழிக்கின்றார். அதனால் இது புகழ்வது போல் பழிக்கும் வஞ்சப்புகழ்ச்சி அணியாகும். இதனை 'மாறுபடு புகழ்நிலை அணி' எனக் கூறும் தண்டியலங்காரம்.

'கருதிய பொருடொகுத் தாங்கது பழித்தற்கு
வேறொன்று புகழ்வது மாறுபடு புகழ்நிலை' (தண்டிநூ .89)

**புகழாப் புகழ்ச்சி அணி**

பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டீண்டு உலகுபுரப் பதுவே

பறம்பு மலை மன்னன் பாரி. வள்ளல் தன்மையில் சிறந்தவன். கடையெழு வள்ளல்களில் ஒருவன். வந்தவர் கேட்பதற்கு முன்பே தானே முன்சென்று கொடுத்து மகிழ்பவன். கொடுப்பதில் அவனுக்கு இணையாருமில்லை என்ற புகழ் எங்கும் பரவிற்று. கபிலர் பெரும் புலவர். இதனைப் பார்க்கிறார் அப்புலவர். 'மழையும் இவ்வாறு வேண்டியவர் வேண்டாதவர் எல்லோருக்கும் பெய்து தழைக்கச் செய்கிறதே. ஏன் எல்லோரும் பாரியை மட்டும்

பாராட்டுகிறார்கள்?', என மழையாகிய மாரியை உயர்த்திப் பாரியைப் பழிப்பது போலப் பாடுகிறார். ஆனால் உண்மையில் பாரி மட்டுமே பயன்கருதாது மழைபோலப் பிறர்க்கு உதவுகிறான் எனப் பாராட்டுவதே கபிலர் நோக்கம். அதனையே இப்பாடல் காட்டுகிறது. அதனால் இப்பாடல் பழிப்பது போல் புகழும் வஞ்சப் புகழ்ச்சி அணி ஆகும். இதனைத் தண்டியலங்காரம் புகழாப் புகழ்ச்சி அணி எனக் கூறும்.

'பழிப்பது போலும் பான்மையின் மேன்மை
புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி'

**சிலேடை அணி**

சிலேடை அணியை, இரட்டுற மொழிதல் அணி என்றும் கூறுவர். ஒரு செய்யுளில் இடம்பெறும் சொற்கள் அல்லது தொடர்கள் இருவேறு பொருளைக் குறிப்பிடும் படியாகப் பாடுவது சிலேடை அணி எனப்படும். இத்தகு பாடலில் இடம் பெறும் சொற்கள் ஒவ்வொன்றும் இரண்டு பொருள் தருவனவாக அமைத்துப் பாடவதும் உண்டு. இவ்வாறு பாடுவது செம்மொழிச் சிலேடை எனப்படும்.மாறாக ஒரு பாடலில் இடம்பெறும் சொல்லைப் பிரிக்காமல் படித்தாலோ அல்லது வெவ்வேறு வகையாகப் பிரித்தாலோ ஒரு பொருள் தருவதாகவும் வேறுவகையில் பிரித்தால் வேறுபொருள் தருவதாகவும் அமைத்துப் பாடுவதும் உண்டு. இவ்வாறு பாடுவது பிரிமொழிச் சிலேடை எனப்படும்.

**செம்மொழிச் சிலேடை**

(எ-டு) 'ஓடு மிருக்குமத னுள்வாய் வெளுத்திருக்கும்
நாடுங் குலைதனக்கு நாணாது - சேடியே
தீங்கான தில்லா திருமலைரா யன்வரையில்
தேங்காயு நாயுமெனச் செப்பு'

இது நாயையும் தேங்காயையும் குறித்துப் பாடியது.

'தோழியே தீமையானது என்றும் இல்லாத திருமலைராயன் மலைமீது தேங்காயனது ஓட்டினைக் கொண்டிருக்கும் அதன் உட்பக்கம் வெளுப்பாய் இருக்கும். அது குலையில் இருப்பதற்குக் கோணாது.

நாயானது விரைவாக ஓடிச்செல்லும். இளைத்தால் ஓரிடத்திலே இருக்கும். அதன் வாயின் உட்பக்கம் வெளுப்பாய் இருக்கும். இரையை விருப்பத்துடன் நாடிச் செல்லும். குரைப்பதற்கு வெட்கப்படாது.

எனவே தேங்காயும் நாயும் ஒப்பாகும்.

இப்பாடலில் இடம் பெற்ற சொற்களைப் பிரிக்காமலேயே அவை இருவேறு பொருள்பட்டமை காண்க.

**பிரிமொழிச் சிலேடை**

(எ-டு)

'மன்னீரிலே பிறக்கும் மற்றலையி லேமேயும்
பின்னீச்சிற் குத்தும் பெருமையால் -சொன்னேன்கேள்
தேனுந்து சோலைத் திருமலைரா யன்வரையில்
மீனும்பே னும்சரியா மே'.

இப்பாடல் மீனுக்கும் பேனுக்கும் பாடியது.

'தேனைச் சொரியும் பூஞ்சோலையுடைய திருமலைராயன் மலையில் .

மீனானது (மன் + நீரிலே) நிலைபெற்ற நீர்நிலைகளிலே பிறக்கும். (மற்று + அலையிலே) நீர் அலையின் மீது அங்கும் இங்கும் செல்லும். (பின் + நீச்சில்) நீந்தும் இடத்துப் பின்னாக வந்து கொத்தும் பெருமையை உடையது.

பேனானது (மன்+ஈரிலே) தலையிலே நிலைத்த பேன் முட்டையிலே இருந்து பிறக்கும். (மல்+தலையிலே) வலிய தலைமயிரிலே திரிந்து செல்லும் (பின்+ஈச்சில்) பிறகு மக்களால் எடுத்து ஈச்சு என்னும் ஒலியெழக் குத்தப்படும் இயல்புடையது.

இவ்வாறு மீனும் பேனும் சமம் என்று நான் சொன்னதைக் கேட்பாயாக'.

இப்பாடலில் மன்னீர், மற்றலை, பின்னீச்சு என்னும் சொற்கள் வெவ்வேறு வகையாகப் பிரிக்கப்பட்டமையால் பொருள்வேறுபட்டமை காண்க. அதனால் இப்பாடலைப் பரிமொழிச் சிலேடை என்பர்.

'ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி
தெரிதர வருவது சிலேடை யாகும்' (தண்டி. நூ.76)

'அதுவே
செம்மொழி பிரிமொழி எனஇரு திறப்படும்' (தண்டி. நூ. 77)

**வேற்றுமை அணி**

புலவர் ஒரு செய்யுளில் இரண்டு பொருள்களைக் கூறி முதலில் அவற்றிற்கு இடையே உள்ள ஒற்றுமையையும் பின்னர் ஒரு காரணம் பற்றி அவ்விரண்டிற்கும் இடையே உள்ள வேற்றுமையையும் சுட்டிக்காட்டிப் பாடுவது வேற்றுமை அணி எனப்படும்.

(எ-டு) 'தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு'

திருவள்ளுவர் நெருப்பு, நாக்கு என்னும் இருபொருள்களை இப்பாடலில் குறிப்பிடுகிறார். நெருப்பு வெம்மையால் சுடுகிறது. நாக்குக் கடுஞ்சொற்களால் சுடுகிறது என இரண்டிற்கும் உள்ள ஒற்றுமையை முதலில் குறிப்பிட்டார். பின்னர்த் தீயால் சுட்டது ஆறும் என்றும் நாவால் சுட்டது ஆறாது என்றும் அவற்றிற்கு இடையே உள்ள வேற்றுமையையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

இவ்வாறு அமையப் பாடுவது வேற்றுமை அணி எனப்படும்.

'கூற்றினும் குறிப்பினும் ஒப்புடை இருபொருள்
வேற்றுமைப் படவரின் வேற்றுமை யதுவே' (தண்டி – நூ.46)

**வேற்றுப்பொருள் வைப்பு அணி**

புலவர் ஒரு சிறப்பான பொருளைக் கூற நினைத்து அதற்கு உலகறிந்த தக்கதொரு பொருளைச் சான்றாகக் காட்டிப் பாடுவது வேற்றுப்பொருள் வைப்பு அணி எனப்படும்.

(எ-டு) 'கன்றி முதிர்ந்த கழியப்பன் னாள் செயினும்
ஒன்றும் சிறியார்கண் என்றானும் - தோன்றாதாம்
ஒன்றாய் விடினும் உயர்ந்தார்ப் படுங்குற்றம்.
குன்றின்மேல் இட்ட விளக்கு'.

முன்றுரையரையனார், தமது பழமொழி நானூறு என்னும் நூலில் 'பெரியோர் தவறு செய்தால் அது உடனே உலகத்தார்க்குத் தெரிந்து பெரும் பழிக்குக் காரணமாகும்' என்னும் கருத்தைக் 'குன்றின்மேல் இட்ட விளக்கு' என்னும் மக்கள் வழக்கில் உள்ள பழமொழியை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.எனவே இது வேற்றுப்பொருள் வைப்பு அணியாகும்.

'முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளை உலகறி பெற்றி
ஏற்றி வைத்து உரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே' (தண்டி. நூ. 47)

**பொருத்துக – (i) பொருத்தமான பொருளைத் தேர்வு செய்தல்**

1. வான் - மழை
2. துப்பார்க்கு - உண்பவர்க்கு
3. விண் - மழை / ஆகாயம்
4. விரிநீர் - கடல்
5. வியன் உலகம் - அகன்ற உலகம்
6. உடற்றும் - வருந்தும்
7. வாரி - வருவாய்
8. கெடுப்பது - அழிப்பது
9. சார்வாய் - துணையாய்
10. விசும்பு - மேகம்
11. துளி - மழை
12. பசும்புல் - இளம்புல்
13. தலை - முளை
14. காண்பு அரிது - காண முடியாது
15. நீர்மை - இயல்பு
16. குன்றும் - குறையும்
17. தடிந்து - குறைத்து
18. எழிலி - மேகம்
19. பூசனை - வழிபாடு
20. செல்லாது - நடைபெறாது
21. வறக்குமேல் - (பொய்யாது) வறளுமானால்
22. வானோர்க்கு - தேவர்களுக்கு
23. தானம் - ஈகை
24. தங்கா - நிற்க மாட்டாது
25. வழங்காது - கொடுக்காது
26. அமையாது - பொருந்தாது
27. வானின்று - மழை இல்லாமல்
28. ஒழுக்கு - ஒழுக்கம்
29. வாய்மை - உண்மை
30. யாதொன்றும் - ஒரு சிறிதும்
31. சொலல் - சொல்லுதல்
32. புரை - குற்றம்
33. தீர்ந்த - நீங்கிய
34. பயக்கும் - கொடுக்கும்
35. சுடும் - துன்புறுத்தும்
36. பொய்யாது - பொய் கூறாது
37. உலகத்தார் - உயர்ந்தோர்
38. மொழியின் - சொல்வானாயின்
39. தலை - சிறப்புடையவன்
40. அன்ன - போல
41. எய்யாமை - முயலாமை
42. ஆற்றின் - செய்தால்
43. நன்று - நன்மை
44. புறம் - உடல்
45. அகம் - உள்ளம்
46. சன்றோர் - மேலானவர்
47. பொய்யா விளக்கே - பொய்யாமை யாகிய விளக்கே
48. மெய்யா - மெய்நூல்
49. எனைத்தொன்றும் - யாதொரு தன்மையிலும்
50. நல்ல - சிறந்தன
51. பிற - வேறு
52. துணை - நட்பு : சுற்றம்
53. நலம் - நன்மை
54. வினை - தொழில்
55. ஒருவுதல் - நீக்குதல் செ பு வி வெ ச ஞா தி நோ
56. நன்றி - நன்மை
57. பயவா - தராத
58. ஓஒதல் - தவிர்த்தல்
59. மாழ்கும் - அழிக்கும்
60. இடுக்கண் - துன்பம்
61. இளிவந்த - இழிவான
62. இடங்கர் மா - முதலை
63. எற்றென்று - எத்தன்மைத்து என்று
64. இரங்குவ - வருந்துவதற்குக் காரணமான
65. ஈன்றாள் - தாய்
66. பழிமலைந்து - பழியைச் சுமந்து
67. ஆக்கம் - செல்வம்
68. கழி - மிகுந்த
69. ககம் - பறவை
70. கடிந்து ஓரார் - தாமும் நீங்கிடாது செய்பவர்
71. பீழை - பழி
72. அழக்கொண்ட - பிறரைத் துன்புறுத்திப் பெற்றது
73. பிற்பயக்கும் - பின்னர் நல்ல பயனைத் தரும்
74. சலம் - வஞ்சனை
75. ஏமார்த்தல் - பாதுகாப்புச் செய்தல்
76. பசுமண் - பச்சை மண்
77. கலம் - குடம்
78. அணியென்ப - அழகு என்று கூறுவர்
79. பெண்மை நலம் - கற்பு
80. நாணம் - நாணும் இயல்பு (வெட்கப் பண்பு)
81. தான் செல் உலகு - மறுமை உலகம்
82. கள்ளாமை - திருடாமை
83. கடிய - கொடுந்துன்பங்கள்
84. தள்ளாமை - தவிர்க்காமை
85. நள்ளாமை - நட்புக் கொள்ளாமை
86. சிறியர் - கீழான செயல்கள் செய்பவர்
87. பெருக்குக - உயர்ததுக
88. நட்டாரை - பகைவரை
89. தருக்குக - வெல்க
90. ஒட்டாரை - பகைவரை
91. அருக்குக - சுருக்கிக் கொள்க
92. சுருக்குக - தணித்துக் கொள்க
93. வளமிலா - வருவாய் இல்லாத
94. போழ்தத்து - காலத்தில்
95. வள்ளன்மை - ஈகைப்பண்பு
96. கிளைஞர் - உறவினர்
97. தமரல்லார் - உள்ளன்பு இல்லாதவர்
98. ஊண் - உணவு
99. தகவு - நன்னடத்தை
100. கைத்தூண் - தீயொழுக்கத்தால் வந்த உணவு
101. வட்டு - சூதாடு கருவி
102. வான்பொருள் - மிக்க பொருள்
103. கணிகை - பரத்தை
104. காணம் - பொன்
105. வங்கம் - மரக்கலம்
106. தங்கா வேட்கை - ஓரிடத்தில் தங்கவிடாத வேட்கை
107. முந்நீர் - கடல்
108. வளி - காற்று
109. ஒடிமரம் - ஒடிந்த மரத்துண்டு
110. திரை - அலை
111. உதைப்ப - உந்த
112. நக்க சாரணர் - உடையில்லாமல் திரிபவர்
113. நாகர் - ஓர் இனத்தவர்
114. நாவாய் - கப்பல்
115. மரம் - பாய்மரம்
116. போந்தார் - வந்தார்
117. யாமம் - இரவு
118. ஊரீரேயோ - ஊரில் உள்ள சான்றோர்களே
119. ஈமம் - பிணஞ்சுட அடுக்கிய விறகு
120. தாரீர் - தருவீர்
121. சாற்றினள் - சொல்லினள்
122. சுடலை - மயானம், சுடுகாடு
123. முடலை விறகு - காய்ந்த முறுக்குண்ட விறகு
124. முளியெரி - மிக்க நெருப்பு
125. எரிபொத்தி - எரிமூட்டி
126. பள்ளி - இடம்

127. கூறை - புடவை
128. ஆடகம் - பொன், துவரை
129. சாந்தம் - சந்தனம்
130. அசைந்த கூந்தல்- அவிழ்ந்து பரந்து அசைந்து கொண்டிருந்த கூந்தல்
131. வீராணம் - பெரும்பாறை
132. செய்யோள் - திருமகள்
133. தீவினையாட்டி - தீவினை செய்தவள்
134. உய்ப்ப - செலுத்த
135. அசரீரி - உடல் இல்லாதது (வான்குரல்)
136. ஐயரி யுண்கண் - அழகிய செவ்வரி படர்ந்த மையுண்ட கண்
137. மனையகம் புகுந்து - வீட்டிற்றுச் சென்று
138. கண்மணியனையான் - கண்ணிலுள்ள மணியொப்பவனான கணவன்
139. புண்ணிய முட்டாள் - அறம் புரிதல் வழுவாதவனாய்
140. அரும்பெறல் மரபு - பெறுதற்கரிய முறைமை (கற்பு)
141. வியப்பினள் - தகுதியுடையவள்
142. புனையா ஓவியம் - வண்ணம் தீட்டப்பெறாத ஓவியம்
143. பாரகம் - நிலவுலகம்
144. ஒழுக்கம் - நல்லொழுக்கம்
145. நான்மறை - நால்வேதங்கள்
146. மூதூர் - பழைய ஊர்
147. கொள்கை - உயிரின் மேம்பாடு பற்றிய குறிக்கோள்
148. சீலம் - ஒழுக்கம்
149. செல்வம் மல்கி நிகழ் - செல்வம் நிறைந்து திகழ்கின்ற
150. சிந்தை தரும் உணர்வு - உள்ளத்தில் தோன்றுகின்ற எண்ணங்கள்
151. தம்பிரான் - சிவபெருமான்
152. அடுப்பது - செய்யத்தக்கது
153. வேணி - சடை
154. கொடுப்பது - அடியார்க்கு கொடுக்கும் பொருள்
155. மடு - ஆழமாகிய பெரிய நீர்நிலை
156. எடுப்பது - அமைத்தல், கட்டுதல்
157. இரு நிதியின்மை - பொருளில்லாமை
158. எனைத்தும் - எவ்வகையிலும்
159. பொருட்பேறு - பொருள் பெறும் நிலை
160. நைவார் - மனம் மிக வருந்துதல்
161. நிதியம் - பொருட்திரன்
162. நேர்ந்து - துணிவு பூண்டு
163. திணைத்துணை - சிறிய அளவாக
164. செய் - வயல்
165. அடிநிலை - அத்திவாரம்
166. பாரித்தல் - பரப்புதல், கால் கொள்ளுதல்
167. கமடம் - ஆமை
168. காதலில் - ஆன்பால், ஆசையால்
169. கண்படாது - உறங்காது
170. ஆகமம் - வேகத்தின் சாரமாக உள்ள நூல்
171. முன்னிய - கருதிய
172. படை - அடுக்கு
173. சிகரம் - உச்சி
174. மானம் - விமானம்
175. முன்னிய முழம் - விதித்த முழு அளவு
176. நெடிது நாள் கூட - பல நாள் செல்ல
177. தூபி - விமானத்துச்சியில் அமைக்கும் கூரிய சிகரம்
178. சுதை நல்வினை - சுண்ணச்சாந்து
179. கூவல் - கிணறு
180. மாடு - செல்வம்
181. சூழ்மதில் - புறச்சுற்று
182. வாவி - திருக்குளம்
183. தொட்டு - அகழ்ந்து அமைத்து
184. விதித்த - குறித்த
185. தாபனம் - பிரதிட்டை
186. காடவர் - பல்லவ அரசராகிய இராசசிங்கர்
187. கற்றளி - கற்கோயில்
188. ஆபம் - நீர்
189. மால் - திருமால்
190. ஏடலர் - இதழ்மலர்ந்த
191. வேய்ந்தார் - கொன்றை மாலையை அணிந்த சிவபெருமான்
192. நன்றுநீடு - நன்மை நீடிய
193. நீடாலயம் - பெரிய கோயில்
194. ஒன்றிய செயலை - பொருந்திய செய்கையை
195. தொண்டர் கோயில் - பூசலாரது மனக்கோயில்
196. போந்தார் - மறைந்தருளினார்
197. ஏத்த - துதிக்க
198. அண்டர் நாயகன் - தேவர் தலைவன்
199. தாபித்து - நிலைநிறுத்தி
200. நுதல் - நெற்றி
201. மருண்டு - மருட்சியடைந்து
202. எடுத்து - விரித்து
203. அதிசயம் - பெருமிதமாக அறிந்து மகிழ்ந்த மனநிலை
204. புரையறு - குற்றமற்ற
205. விரை - வாசனை
206. தானை - சேனை
207. புக்கான் - அடைந்தான்
208. அன்பரும் - பூசலாரும்
209. சிந்தையாலயம் - மனத்தினால் அமைத்த கோயில்
210. பூசனை - பூசை
211. பொன்புனைமன்று - பொன்னம்பலம்
212. சூதர் - சூதாடுபவர்
213. மனை - இல்லம்
214. தொண்டுமகளிர் - பணிப்பெண்டிர்
215. பணயம் - பிணைத்தொகை
216. தொண்டச்சி - அடியாள்
217. துருபதன் - பாஞ்சால நாட்டு அரசன்
218. திட்டத்துய்நன் - திரௌபதியின் சகோதரன்
219. பகடை - சூது தாயங்களில் ஒன்று
220. எரிதழல் - தீப்பந்தம்
221. சகாதேவன் - தருமனின் இளவல்
222. விசயன் - அருச்சுனன்
223. திரிலோகம் - மூன்று உலகம்
224. திரிலோக நாயகன் - தருமன்
225. மருமம் - இரகசியம்
226. கருமம் - கடமை
227. தனு - வில்
228. காண்டீவம் - அருச்சுனன் வில்
229. வேதநெறி - வேதகால நீதி
230. வழு - குற்றம்
231. தாரம் - மனைவி
232. தாதன் - அடிமை
233. உடைமை - செல்வம்
234. இரைச்சல் - கூச்சல்
235. ஏந்திழை - பெண்
236. களிப்பது - மகிழ்வது
237. அவைக்களம் - நியாயம் உரைக்கும் சான்றோர் கூடியுள்ள அரசவை
238. செருக்களம் - போர்க்களம்
239. பிடி - பெண்யானை
240. யா - ஒரு வகை மரம்
241. படி - நிலம்
242. முருகியம் - குறிஞ்சிப்பறை
243. பொன் - அழகு
244. சினை - கிளை
245. ஆர்ப்ப - ஒலிப்ப

246. சிறை - இலகு
247. பூவை - நாகணவாய்
248. பொலம் - அழகு
249. கடறு - காடு
250. முக்குழல் - கொன்றை, ஆம்பல், வேய்ங்குழல்
251. பொதுவர் - முல்லைநில மக்கள்
252. பொலி - தானியக் குவியல்
253. உழை - ஒருவகை மான்
254. எல்லி - ஞாயிறு
255. பல்லவம் - தளிர்
256. நிரை - ஆவினம்
257. கொடுவரி - புலி
258. படர் - துயர்
259. வெஞ்சுரம் - பாலைநிலம்
260. கல் - மலை
261. முருகு - அழக, மணம்
262. கான்யாறு - காட்டாறு
263. மல்லல் - வளம்
264. செறு - வயல்
265. காஞ்சி, மருதம் - மர வகைகள்
266. வஞ்சி - கொடிவகை
267. நீரார் - நல்லியல் புடையவர்
268. ஊனின் சீரக இயலார் - சமையல் தொழிலில் வல்ல மகளிர்
269. வைகறை - விடியற்காலம்
270. கானல் - கடற்கரை
271. கழி - உப்பங்கழி
272. மகன்றில் - அன்றில் பறவை இணைபிரியாது வாழும் ஒரு நீர்பறவை
273. கொண்கன் - தலைவன்
274. மல்க - நிறைய
275. நரையிதழ் - வெளுத்த இதழ்
276. அந்தி - மாலை
277. சால் - உழுதல்
278. தண் - குளிர்
279. தொய்யிள மூங்கில் - வளைந்த மூங்கில்
280. வனம் - காடு
281. தூங்கி - அசைந்து
282. களி - மகிழ்ச்சி
283. வீறு - வேகம்
284. விஞ்சி - மேம்பட்டு
285. கங்குல் - இரவு
286. கார் - கருமை
287. மறு - குற்றம்
288. மழைக்கால் வெய்யில் - மழையை அடுத்து அடிக்கும் வெயில்
289. களிக்கும் - மகிழும்
290. வீறு - ஒளிஇ பெருமை
291. செற்றம் - கறுவு
292. செயிர்த்தல் - வெளிப்படையாக வெகுளுதல்
293. உறுதல் - மெய்தீண்டுதல்
294. இரந்தன்று - யாசித்து கொண்டது
295. அமர் கடத்தல் - நேர் நின்று போரிட்டு வெல்வது
296. கழை - மூங்கில்
297. விசை - விரைவு (அ) வேகம்
298. தெறிப்ப - வெடிக்க
299. புழுங்கி - வருந்தி
300. பொடித்த - தொன்றிய
301. புள்ளிகள் - வியர்வைத் துளிகள்
302. பாடபேதம் - மெய்ம்மேல்
303. முள் - முட்களையுடைய
304. ஆறு - வழி
305. கல் - பருக்கைக்கல்
306. தென்னர் - பாண்டியர்
307. முனிதல் - வெகுளல்
308. வெள்ளாறு, கோட்டாறு - இவை நதியைச் சார்ந்த ஊர்ப்பெயர்கள்
309. தித்திக்கும் - இனிக்கும்
310. தெள்ளமுது - தெளிந்த அமுதம்
311. முத்தமிழ் - இயல், இசை, நாடகம்
312. புத்தி - அறிவு
313. உவந்து - மகிழ்ந்து
314. உரைக்கும் - கூறும்
315. விண்ணப்பம் - வேண்டுகோள்
316. விளம்ப - சொல்ல
317. குறம் - குறவஞ்சி
318. பள் - பள்ளு
319. மூன்றினம் - தாழிசை, துறை, விருத்தம் என்ற மூவகை பாவினங்கள்
320. சிந்து - ஒரு பா வகை
321. சிந்தாமணி - கெடாத மணி
322. சிந்தும் - கெடும்
323. அந்தரம் - வானம்
324. முக்குணம் - இராசதம், தாமதம், சாத்துவிகம்
325. பத்து குணம் - சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தல் முதலிய நன்னூல் கூறும் பத்து அழகுகள்
326. வண்ணங்கள் (பஞ்சவர்ணம்) - ஐந்து வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை (பச்சை)
327. கொண்டல் - மேகம்
328. வானம் - மேகம்
329. தண்டலை - சோலை
330. பேரண்டம் - வானப் பெருவெளிப் பரப்பு
331. நாடும் - விரும்பும்
332. கனகம் - பொன்
333. மூன்றில் - முற்றம் (வீட்டின் முன் புறம்)
334. அனம் - அன்னப்பறவை
335. வெய்யோன் - கதிரவன்
336. எயில்வழி - அம்புகள் எய்ய அமைந்துள்ள துளைவழி
337. மது - தேன்
338. அண்டர் - தேவர்
339. செண்டு - திருமாலின் ஒருவிதப் படைக்கருவி
340. கத்தும் - முழங்கும்
341. தரங்கம் - கடலலை
342. சூல் - கருப்பம்
343. உளைந்து - வருந்தி
344. வாலுகம் - வெண்மணல்
345. கான்றமணி - சொரிந்த முத்து
346. கரடம் - மதம்
347. விகடம் - விகடக் கூத்து, உன்மத்தமுமாம்
348. தடம் - மலை
349. தந்திப் பிறைக்கூன் மருப்பு - யானையின் பிறைச்சந்திரன் போல் வளைந்துள்ள கொம்பு (தந்தம்)
350. நித்திலம் - முத்து
351. சாலி - ஒரு வகை நெல்
352. கொண்டல் - மேகம்
353. வலம்புரிகள் - வலப்புறமாக வரிகள் அமைந்த ஒருவகை சங்குகள்
354. அரவம் - பாம்பு, ஓசை
355. அக்கரம் - எழுத்து
356. அட்டாட்சரம் - எட்டு எழுத்துக்களையுடைய ஓம் நமோ நாராயணா
357. எட்டு - எட்டு என்னும் எண், எட்டுகின்ற தொலைவு
358. கைக்கொள் - கைக்கூப்பித் தொழுதல், கையில் கட்டிக் கொள்ளுதல்
359. அகண்டம் - முழுமை

360. விசால பார்வை - விரிந்த பார்வை
361. சங்கமம் - கலத்தல்
362. பேதம் - வேறுபாடு
363. புகழ்வேன் - சொல்வேன்
364. உடைமை - செல்வம்
365. புவி - பூமி
366. தீயினை வீட்டி - தீயினை மூளச்செய்து
367. மடமை - அறியாமை
368. மமதை - செருக்கு
369. புலை - இழிவ
370. வையம் - உலகம்
371. துர்நீர் - கெட்ட நீர்
372. சுண்டி - வற்றி
373. கருணை - அருள்
374. பழுதிலா - குற்றமில்லாத
375. உருவம் - வடிவம்
376. உவர்நிலம் - உப்புமண்
377. உரைகல் - பொன்னை உரசிப் பார்க்கும் கல்
378. ஆற்றல் - சக்தி
379. ஒப்பற்ற - நிகரற்றன
380. இயல்பு - நற்குணம் (பண்பு)
381. திலம் - எள்ளு
382. உடுக்கள் - விண்மீன்கள்
383. அயர்த்தல் - உழைத்துக் களைத்தவர்
384. கயமை - கீழ்மைக் குணம்
385. கங்கை - இமயனலையில் உற்பத்தியாகும் வற்றாத ஆறு
386. நர்மதை - தக்காண பீடபூமியில் உற்பத்தியாகி மேற்குநோக்கி பாயும் ஆறு
387. பொன்னி - காவிரியாறு குடகு மலையில் உற்பத்தியாகிறது
388. மானுடம் - மனிதம் (மனிதநேயம்)
389. சங்கமித்தல் - கலத்தல்
390. தளைகள் - தடைகள்
391. இடர் - துன்பம்
392. பொருநை - தாமிரபரணியாறு, தென்பொதிகை மலையில் உற்பத்தியாகிறது
393. மானுடர் - மனிதர்
394. குனித்த - வளைந்த
395. குமிண்சிரிப்பு - புன்சிரிப்பு
396. பனித்த - குளிர்ந்த
397. எடுத்த பொற்பாதம் - தூக்கிய திருவடி
398. நிலந்தரஞ் செய்யும் - அழித்துவிடும்
399. விசும்பு அருளும் - விண்ணுலகு அளிக்கும்
400. வலம் - வெற்றி
401. நாமம் - பெயர்
402. கருவி - வாள்
403. பொருநர் - படைவீரர்
404. நேசி - அன்பு காட்டு
405. வானவர் - மேல் உலகத்தார்
406. மறை - வேதம்
407. ஊன் - தசை
408. ஞானம் - அறிவு
409. நடு - நடுவுநிலை
410. ஊனம் - குற்றம்
411. உறையும் - வாழும்
412. கோ - இறைவன்
413. ஆரியம் - வடமொழி
414. திங்கள் - மாதம்
415. உறுதுணை - பொருந்துணை
416. மாக்கள் - விலங்குகள்
417. வையம் - உலகம்
418. நாட்டம் - விருப்பம்
419. ஆசி - வாழ்த்து
420. உபதேசம் - அறிவுரை
421. அரையில் - இடுப்பில்
422. ஞானி - பேரறிவ உடையவன்
423. தடைகள் - இடையூறுகள்
424. மதியாமல் - பொருட்படுத்தாமல்
425. மதாசாரியார் - மதகுரு
426. கோலம் - ஒப்பனை
427. உழலும் - துன்பப்படும்
428. மாதுரியம் - இனிமை
429. பகர்ந்தான் - கூறினான்
430. புருடர்கள் - வீரர்கள், ஆண்களுமாம்
431. ஸ்தீரிகள் - வீராங்கனைகள், பெண்களுமாம்
432. பிரசங்கம் - சொற்பொழிவு
433. சாமானிய - எளிய
434. சிருஷ்டித்து - படைத்து, உருவாக்கி
435. அதிர்ஷ்டம் - எதிர்பாராத பயன்ஃநல்லூழ்
436. வரிசை - மரியாதை
437. சோமன் - சந்திரன்
438. புவி - உலகம்
439. உற்றுழி - துன்புற்றபோது
440. கிழமை - உறவு
441. புரந்து - காத்து
442. வெற்பு - மலை
443. பணியாள் - வேலையாள்
444. நலிவு - கேடு
445. நோவு - நோய்
446. நொய்மை - கனமின்மை, மென்மை
447. தொய்வு - இளைப்பு
448. குருதி - இரத்தம்
449. வன்மம் - தீராப்பகை
450. அழுக்காறு - பொறாமை
451. செவ்வி - தன்மை, அழகு
452. கரிப்பு - அச்சம்
453. மடமை - பேதைமை
454. பலகணி - சாளரம், திட்டிவாயில்
455. காலதர் - காற்று வரும் வழி, சாளரம்
456. ஞாயிறு - கதிரவன்
457. அவா - ஆசை
458. ஐயம் - சந்தேகம்
459. கணிசம் - மிகதியான
460. பாரம்பரியம் - மரபு வழி
461. பாமர மக்கள் - விரிந்த அறிவிலார்
462. வாதம் - தருக்கம்
463. காலாவதி - காலவரையறை
464. பரிமாணம் - அளவு
465. பிரச்சினை - கேள்வி
466. நிமித்தம் - காரணமாக
467. அரணாய் - பாதுகாவலனாய்
468. கலக்காமல் - ஆலோசிக்காமல்
469. சர்வகலாசாலை - பல்கலைக்கழகம்
470. சந்தர்ப்பம் - நேரம்
471. படாடோபம் - ஆடம்பரம்
472. முகஸ்துதி - பொய்யான புகழ்ச்சி
473. வெகுண்டார் - சினங் கொண்டார்.
474. பூரித்தார் - மிகவும் மகிழ்ந்தார்
475. அமல் செய்யப்பட்டது - நடைமுறை படுத்தப்பட்டது
476. இல்லாண்மை - குடியினை ஆளும் தன்மை
477. நன்றி - நன்மை
478. ஏசாமை - பழிச்சொல் சொல்லாமை
479. புரை - குற்றம்
480. வடு - பழி, குற்றம்
481. சோகாப்பர் - துன்பப்படுபவர் (வருத்தமடைவர்)
482. முதுமொழி - பழமொழி
483. மாரி - மழை

484. மாசு - அழுக்கு
485. பிணைந்த - சேர்ந்த
486. மாசு - குற்றம்
487. அங்கை நெல்லிக்கனிபோல — உள்ளங்கையில் நெல்லிக்கனி வைத்தால் அது தெளிவாக தெரிவது போல
488. அரண்கள் - பாதுகாப்புகள்
489. ஒக்கும் - நிகராகும், சமமாகும்
490. ஒவ்வா - நிகர் ஆகா, சமமாகா
491. சான்றாண்மை - கல்வி, கேள்வி, அறிவு ஒழுக்கத்தால் சிறந்ததன்மை
492. ஒப்புரவு - (உலகத்தோடு இயங்குதல்) தம் நிலைக்கு ஏற்ப கொடுத்து உதவி வாழ்தல்
493. கண்ணோட்டம் - அனைவரிடத்தும் ஒரு சீராக காட்டும் அன்பு
494. சால்பு - சிறப்பு தன்மை
495. கடலுள் மாய்ந்த - மன்னனாகும் முன்பே கலத்தில் இளம்பெருவழுதி கடலில் சென்றபோது கலம் கவிழ்ந்து மாய்ந்தான்.
496. எண்பேராயம் - எண்பெருந்துணைவர் (கரணத்தியலவர்), கருமவிதிகள் கனகச் சுற்றம், கடைக்காப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், இவுளிமறவர்
497. படமாடக் கோயில் - கோயிலுள்ள இறைவன் திருவுருவம்
498. நடமாடக்கோயில் நம்பர் - மக்கள்
499. வடலூர் வள்ளலார் - இராமலிங்க அடிகள்
500. பீடு நடை - பெருமை மிக்க நடை
501. கொற்றம் - வெற்றி
502. வீடு - மோட்சம்
503. ஐம்பெருங்குழு - அரசர்க்கு ஆலோசனை கூறும் ஐவர்.
(அமைச்சர், அந்தணர், படைத்தலைவர், தூதுவர், சாரணர்)
504. நற்பேறு - சிறந்த செல்வம்
505. அறுதியிட்டு - உறுதியாக
506. அயர்விலர் - சோம்பி இரார்
507. நிலைக்களங்கள் - இருப்பிடங்கள்
508. கோட்பாடு - கொள்கை
509. இசைவு - உடன்பாடு
510. திறை - கப்பம்
511. பார் - உலகம்
512. தளை - விலங்கு
513. விழைவு - விருப்பம்
514. அவலம் - துன்பம், கவலை
515. அவை - சபா மண்டபம்
516. கைம்மாறு - பதிலுதவி
517. நல்குரவு - வறுமை
518. புணை - தெப்பம்

**பல பொருள் குறித்த ஒருசொல்**

பார் - உலகம், காண்
இசை - புகழ், பாட்டு, இனிய ஒலி
நாண் - வெட்கப்படு, கயறு
மெய் - உடல், மெய்யெழுத்து
திரை - அலை, திரைச்சீலை
மறை - வேதம், மறைத்து வை
பிடி - பெண்யானை, பிடித்துக்கொள்
படி - பாடம் படி, படிக்கட்டு
திங்கள் - சந்திரன், மாதம்
வலி - வலிமை, நோவு
ஆறு - காவிரி ஆறு போன்றவை, ஓர் எண்ணின் பெயர், வழி
மாலை - பூமாலை, பொழுது
நகை - புன்சிரிப்பு, அணிகலன்
மதி - அறிவு, நிலவு, மதித்தல்
வேழம் - யானை, மூங்கில், கரும்பு
பொறி - உறுப்பு, இயந்திரம்
மா - மாமரம், குதிரை, விலங்கு
உடுக்கை - ஆடை, இசைக்கருவி
அன்னம் - பறவை, உணவு
மடி - இறத்தல், சோம்பல்
மாடு - செல்வம், விலங்கு
வேங்கை - விலங்கு, ஒருவகை மரம்

**ஒரு பொருள் குறிக்கும் பலசொற்கள் (ஒரு பொருள் பன்மொழி)**

சூரியன் - ஞாயிறு, கதிரவன், பகலோன் பரிதி
வயல் - கழனி, பழனம், செய்
நெருப்பு - தீ, அனல், கனல்
தவறு - மாசு, குற்றம், பிழை
கிளி - தத்தை, சுகம், கிள்ளை
பெண் - நங்கை, வனிதை, மங்கை
கடல் - பரவை, முந்நீர்
சொல் - பதம், பழமொழி, கிளவி
குழந்தை - மகவு, குழவி, சேய்
செய்யுள் - பா, கவிதை, யாப்பு
மனம் - உள்ளம், நெஞ்சம்
நித்திரை - உறக்கம், தூக்கம்
வையம் - பூமி, மண்ணுலகம், பார், புவி
இடர் - துன்பம், ஊறு, துயரம்
விட - மனை, இல்லம்
இரக்கம் - பரிவு, கருணை, அருள்
மன்னன் - வேந்தன், அரசன், கொற்றவன்
பசு - பெற்றம், ஆ, கோ
உணவு - ஊண், உண்டி
யானை - வேழம், கரி
அவா - ஆசை, விருப்பம், விழைவு
அழகு - பொலிவு, எழில், வனப்பு
புவி - நிலம், உலகம்
ஓம்பல் - காத்தல், பேணுதல்
அன்னை - தாய், அம்மா, பெற்றவள்
பரவை - ஆழி, கடல்
அறிவு - மதி, ஞானம்
புகழ் - இசை, சீர்
நிலவு - மதி, சந்திரன், திங்கள்
மாசு - குற்றம், தீது, அழுக்கு
வசை - பழி, குற்றம்

## (ii) நூல்களும்ஆசிரியர்களும்

- ❖ அகத்தியம் — அகத்தியர்
- ❖ தொல்காப்பியம் — தொல்காப்பியர்

**ஐங்குறுநூறு**

- ❖ குறிஞ்சித் திணை பாடியவர் — கபிலர்
- ❖ முல்லைத் திணை பாடியவர் — பேயனார்
- ❖ மருதத் திணை பாடியவர் — ஓரம்போகியார்
- ❖ நெய்தற் திணை பாடியவர் — அம்மூவனார்
- ❖ பாலைத் திணை பாடியவர் — ஓதலாந்தையார்

**கலித்தொகை**

- ❖ குறிஞ்சிக்கலி பாடியவர் — கபிலர்
- ❖ முல்லைக்கலி பாடியவர் — சோழன் நல்லுருத்திரன்
- ❖ மருதக்கலி பாடியவர் — மருதனில் நாகனார்
- ❖ நெய்தற்கலி பாடியவர் — நல்லந்துவனார்
- ❖ பாலைக்கலி பாடியவர் — பெருங்கடுங்கோன்

**எட்டுத்தொகை**

| எட்டுத்தொகை | தொகுத்தவர் | தொகுப்பித்தவர் |
|---|---|---|
| நற்றிணை (அகம்) | உப்பூரி குடிக்கிழார் | பன்னாடு தந்த மாறன் வழுதி |
| குறுந்தொகை (அகம்) | உப்பூரி குடிக்கிழார் | பூரிக்கோ |
| ஐங்குறுநூறு (அகம்) | புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் | யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறை |
| பதிற்றுப்பத்து (புறம்) | — | — |
| பரிபாடல் (அகம், புறம் இரண்டும்) | கரும்பிள்ளைப் பூதனார் | — |
| கலித்தொகை (அகம்) | நல்லந்துவனார் | — |
| அகநானூறு (அகம்) | மதுரை உப்புரிகுடிகிழார் மகனார் உருத்திர சன்மனார் | பாண்டியன் உக்கிரப் பெருவழுதி |
| புறநானூறு (புறம்) | ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் | — |

**பத்துப்பாட்டு**

| நூற்பெயர் | பாடியவர் | பாட்டுடைத் தலைவன் |
|---|---|---|
| திருமுருகாற்றுப்படை (புலவராற்றுப்) | நக்கீரர் | முருகவேள் |
| சிறுபாணாற்றுப்படை (ஆற்றுப்படை) | இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் | ஓய்மா நாட்டு நல்லியக்கோடன் |
| பெரும்பாணாற்றுப்படை (ஆற்றுப்படை) | கடியலூர் உருத்திரங் கண்ணார் | தொண்டைமான இளந்திரையன் |
| பொருநராற்றுப்படை (ஆற்றுப்படை) | முடத்தாமக் கண்ணியார் | கரிகாற் பெருவளத்தான் |
| கூத்தராற்றுப்படை (மலைபடுகடாம்) (ஆற்றுப்படை) | இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் | நன்னன் சேய் நன்னன் |
| குறிஞ்சிப்பாட்டு (அகம்) | கபிலர் | — |
| முல்லைப்பாட்டு (அகம்) | நப்பூதனார் | — |
| மதுரைக்காஞ்சி (புறம்) | மாங்குடி மருதனார் | பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் |
| பட்டினப்பாலை (அகம்) | கடியலூர் உருத்திரங் கண்ணார் | கரிகாற் பெருவளத்தான் |
| நெடுநல்வாடை (அகமா? புறமா? ஐயம்) | நக்கீரர் | பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் |

**பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் பாடியோரும்**

| நூல் | பொருள் | ஆசிரியர் |
|---|---|---|
| திருக்குறள் | அறம் (நீதி) | திருவள்ளுவர் |
| நாலடியார் | அறம் (நீதி) | சமண முனிவர்கள் |
| பழமொழி நானூறு | அறம் (நீதி) | முன்றுரையரையனார் |
| நான்மணிக்கடிகை | அறம் | விளம்பிநாகனார் |
| திரிகடுகம் | அறம் | நல்லாதனார் |
| சிறுபஞ்சமூலம் | அறம் | காரியாசான் |
| ஆசாரக்கோவை | அறம் | பெருவாயின் முள்ளியார் |
| ஏலாதி | அறம் | கணிமேதாவியார் |
| இன்னாநாற்பது | அறம் | கபிலர் |
| இனியவை நாற்பது | அறம் | பூதஞ்சேந்தனார் |
| முதுமொழிக்காஞ்சி | அறம் | கூடலூர்கிழார் |
| திணைமாலை நூற்றைம்பது | அறம் | கணிமேதாவியார் |
| ஐந்திணை எழுபது | அகம் | மூவாதியார் |
| ஐந்திணை ஐம்பது | அகம் | மாறன் பொறையனார் |
| திணைமொழி ஐம்பது | அகம் | கண்ணன் சேந்தனார் |
| அ) கைந்நிலை | அகம் | புல்லங்காடனார் |
| ஆ) இன்னிலை | அகம் | பொய்கையார் |
| கார் நாற்பது | அகம் | மதுரை கண்ணங்கூத்தனார் |
| களவழி நாற்பது | புறம் | பொய்கையார் |

- ❖ ஆத்திச்சூடி, ஞானக்குறள், கொன்றைவேந்தன்,நல்வழி, மூதுரை(வாக்குண்டாம்) — **ஔவையார்**
- ❖ வெற்றிவேற்கை, நைடதம் — **அதிவீர ராமபாண்டியர்**
- ❖ அறநெறிச்சாரம் — **முனைப்பாடியார்**
- ❖ நன்னெறி — **சிவப்பிரகாசர்**
- ❖ பிரபுலிங்க லீலை, உலக நீதி — **உலகநாதர்**
- ❖ நளவெண்பா, நளோபாக்கியானம் — **புகழேந்திப் புலவர்**

**பாடல்தொகுப்பு — தொகுத்தவர்**

நாலாயிரத்திவ்விய பிரபந்தம் — நாதமுனிகள்

***ஆழ்வார்கள் — 12***

1. பொய்கையாழ்வார்
2. பூதத்தாழ்வார்
3. பேயாழ்வார்
4. மதுரகவியாழ்வார்
5. பெரியாழ்வார்
6. ஆண்டாள்
7. திருப்பாணாழ்வார்
8. திருமங்கையாழ்வார்
9. திருமழிசையாழ்வார்
10. தொண்டரடிப் பொடியாழ்வார்
11. நம்மாழ்வார்
12. குலசேகர ஆழ்வார்

| நூற்பெயர் | பாடியவர் |
|---|---|
| முதல் திருவந்தாதி | பொய்கையாழ்வார் (காஞ்சி) |
| இரண்டாம் திருவந்தாதி | பூதத்தாழ்வார் (மாமல்லபுரம்) |
| மூன்றாம் திருவந்தாதி | பேயாழ்வார் (மயிலாப்பூர்) |
| நான்காம் திருவந்தாதி | திருமழிசையாழ்வார் |
| திருச்சந்த விருத்தம் | திருமழிசையாழ்வார் |
| திருவிருத்தம் | நம்மாழ்வார் |
| திருவாசிரியம் | நம்மாழ்வார் |
| பெரிய திருவந்தாதி | நம்மாழ்வார் |
| திருவாய்மொழி | நம்மாழ்வார் |
| கண்ணிநுன் சிறுதாம்பு என்ற பதிகம் | மதுரகவியாழ்வார் |
| திருப்பல்லாண்டு | பெரியாழ்வார் |
| பெரியாழ்வார் திருமொழி | பெரியாழ்வார் |
| திருப்பாவை(30பாடலக்ள) | ஆண்டாள் |
| நாச்சியார் திருமொழி | ஆண்டாள் |
| பெரிய திருமொழி | திருமங்கையாழ்வார் |
| திருக்குறுந்தாண்டகம் | திருமங்கையாழ்வார் |

அன்பு x பகை
இனிய x இன்னாத
இழிவு x உயர்வு
இடம் x வலம்
இம்மை x மறுமை
இன்னா x இனிய
உறங்கு x விழி
ஏற்றம் x இறக்கம்
பழமை x புதுமை
பெருமை x சிறுமை
வென்று x தோற்று
குழு x தனி
தொன்மை x அண்மை
தன் x பிற
எளிய x அரிய
எட்டிய x எட்டா
செம்மை x கருமை
தீது x நன்று
கூடி x பிரிந்து
நம்பி x நங்கை
திண்மம் x நீர்மம்
தண்மை x வெம்மை
காடு x நாடு
நீண்டு x குறுகி
வாங்கல் x விற்றல்
தலை x கடை
போற்றி x தூற்றி
காய் x கனி
என்னிடம் x உம்மிடம்
தெரு x கொல்லை
தன்னலம் x பிறர்நலம்
தேய்ந்து x வளர்ந்து
தனியாக x கூட்டாக
போடு x எடு
சேமித்தார் x செலவழித்தார்
கனவு x நனவு
வறுமை x வளமை
புதுமை x பழமை
இயற்கை x செயற்கை
அகம் x புறம்
வாழ்வு x தாழ்வு
வாழ்த்தல் x தூற்றல்
நினை x மற
கேடு x நலம்
பிழை x திருத்தம்
தூய்மை x மாசு
புகழ் x இகழ்
நன்மை x தீமை
இனிய x இன்னா
வெண்மை x கருமை
அமைதி x குழப்பம்
இசை x வசை
புகழ் x இகழ்
மேதை x பேதை

தண்மை x வெம்மை
பெருமை x சிறுமை
எளிது – அரிது
ஓய்வு – உழைப்பு
நோதல் - தணிதல்
தட்பம் - வெப்பம்
கனவு x நனவு
மலர்தல் x கூம்புதல்
அருகு x பெருகு
பழமை x புதுமை
வீரன் x கோழை
இகழ்ந்து x புகழ்ந்து
அரியது x எளியது
அடைப்பு x திறப்பு
அருமை x எளிமை
அருள் x மருள்
வெற்றி x தோல்வி
நட்பு x பகை
எட்டா x எட்டிய
முதன்மை x இறுதி
துன்பம் x இன்பம்
மறப்பது x நினைப்பது
தொன்மை x புதுமை
தோன்ற x மறைய
வளர்ச்சி x தேக்கம்
அகநகர் x புறநகர்
அகப்பொருள் x புறப்பொருள்
அகம் x புறம்
அங்கு x இங்கு
அகலுதல் x கிட்டுதல்
அந்தம் x ஆதி
அடி x முடி
அண்மை x சேய்மை
அரிது x எளிது
அரு x மருள்
அவ்விடம் x இவ்விடம்
அறம் x மறம்
ஆக்கம் x கேடு
ஆண்டான் x அடிமை
ஆங்கு xஈங்கு
ஆசை x நிராசை
ஆண்டு xஈண்டு
இகழ்ச்சி x புகழ்ச்சி
இசை x வசை
இணைந்து x தனித்து
இரவு x பகல்
இருள் x ஒளி
இலாபம் x நஷ்டம்
இளமை x முதமை
இன்சொல் x வன்சொல்
இனியது x இன்னாதது
உச்சந்தலை x உள்ளங்கால்
உண்டு x இல்லை
உயர்வு x தாழ்வு

உவத்தல் x காய்தல்
உள்நாடு x வெளிநாடு
உள்ளூர் x வெளியூர்
ஊடல் x கூடல்
எதிர்த்தார் x வரவேற்றார்
எளிது x அரிது
ஏற்றம் x தாழ்வு
ஏறு x இறங்கு
ஒருமை x பன்மை
ஒற்றுமை x வேற்றுமை
ஓங்கியது x தாழ்ந்தது
ஓங்குதல் x ஒடுங்குதல்
கஞ்சம் x தாராளம்
கட்டுதல் x அவிழ்தல்
கவனம் x மறதி
களிப்பு x துயரம்
கற்றல் x கல்லாமை
கனவு x நனவு
கருமை x வெண்மை
காக்க x விடுக
காலம் x அகாலம்
காழ்ப்பு x நயப்பு
குணம் x குற்றம்
குறைவு x நிறைவு
கூடல் x பிரிதல்
கொடு x வாங்கு
கொடுமை x செம்மை
கொள்வினை x கொடுப்பினை
சஞ்சலம் x துணிவு, தெளிவு
சத்து x அசத்து
சாந்தம் x உக்கிரம்
சான்றோன் x மூடன்
சிறப்பு x இழிவு
செய்யார் x செய்வார்
சுகம் x துக்கம்
சுபம் x அசுபம்
சுருக்கம் x பெருக்கம்
செங்கோல் x கொடுங்கோல்
செல்வம் x வறுமை
செலவு x வரவு
சேய்மை x அண்மை
சேர்த்தல் x பிரித்தல்
சௌக்கியம் x அசௌக்கியம்
தக்கவன் x தகாதவன்
தட்பம் x வெப்பம்
தந்நலம் x பிறர்நலம்
தவம் x அவம்
தழுவு x தள்ளு
தள்ளுதல் x தள்ளாமை
தண்மை x நொய்மை
தீமை x நன்மை
துக்கம் x சுகம்
தூய்மை x கலப்பு
தொகை x விரி

தோல்வி x வெற்றி
தோன்றுக x மறைக
நண்பகல் x நள்ளிரவு
நல்லது x கெட்டது
நல்வழி x அல்வழி
நற்குணம் x தீக்குணம்
நன்மை x தீமை
நாற்றம் x தூர்நாற்றம்
நியாயம் x அநியாயம்
நினைவு x மறதி
நீண்ட x குறகிய
நீதி x அநீதி
நுண்மை x பருமை
நேசம் x பகை
பருத்தல் x சிறுத்தல்
பள்ளம் x மேடு
பாலர் x விருத்தர்
பாவம் x புண்ணியம்
பிடித்தல் x விடுதல்
பிணக்கம் x இணக்கம்
புகழ்ச்சி x இகழ்ச்சி
புதியது x பழையது
பூரித்தல் x வாடுதல்
பெரியது x சிரியது
பெரும்பான்மை x சிறுபான்மை
பேதம் x அபேதம்
பொய் x மெய் (மெய்மை)
பொய்மை x பொய்யாமை
போலி x அசல்
மங்கலம் x அமங்கலம்
மடிதல் x விரிதல்
மரியாதை x அவமரியாதை
மருள் x தெருள்
மறைதல் x வெளிப்படல்
முன்பு x பின்பு
முற்பகல் x பிற்பகல்
மூடு x திற
மூதேவி x சீதேவி
மென்மை x வன்மை
மேதை x பேதை
மேலோர் x கீழோர்
மேற்கொள்க x கைவிடுக
வரவு x செலவு
வலப்புறம் x இடப்புறம்

வளைதல் x நிமிர்தல்
வற்றிய x தளிர்த்த
வாழ்வு x தாழ்வு
வாழ்க x வீழ்க
விருப்பு x வெறுப்பு
விவேகி x அவிவேகி
வீரன் x கோழை
வெம்மை x தண்மை
வேண்டுதல் x வேண்டாமை
அசைகிறான் x அசைகின்றிலன்
அசைவான் x அசையான்
அடையும் x அடையா
அணைகிறாள் x அணைக்கின்றலள்
அணைவாள் x அணையாள்
அழுவார் x அழார்
அறும் x அறாது
ஆடின் x ஆடா
ஆழ்வார் x ஆழார்
இடித்தது x இடித்திலது
இடிக்கும் x இடியாது
இயம்பினாள் x இயம்பிலன்
இயம்புவார் x இயம்பார்
ஈந்தார் xஈந்திலர்
ஈவாய் xஈயாய்
உண்டாய் x உண்டிலை
ஊதுகின்றது x ஊதுகின்றிலது
ஊதுக x ஊதாத
எழுந்தேன் x எழுந்திலேன்
எழுவேன் x எழேன்
ஏற்றாய் x ஏற்றிலை
ஏற்பாய் x ஏலாய்
ஒழிந்தாய் x ஒழிந்திலை
ஒழிவாய் x ஒழியாய்
ஓடின x ஓடிற்றில்
ஓடும் x ஓடா
கற்றான் x கற்றிலன்
கற்பான் x கல்லான்
காண்பாய் x காணாய்
காப்பாய் x காவாய்
குடித்தன x குடித்தில
குடியா x குடிக்கும்
கூவியது x கூவிற்றிலது
கூவும் x கூவாது
கேட்கிறாய் x கேட்கின்றிலை

கொடுத்தார் x கொடுத்திலர்
சிரித்தது x சிரித்திலது
சிரிக்கும் x சிரியாது
சென்றன x சென்றில
செல்லும் x செல்லா
சேர்ந்தாய் x சேர்ந்திலை
சேர்வாய் x சேராய்
தின்றான் x தின்றிலன்
தின்பான் x தின்னான்
தேய்ந்தன x தேய்ந்தில
தேயும் x தேயா
தொட்டான் x தொட்டிலன்
தொடுவாள் x தொடாள்
தோண்டிலர் x தோண்டிற்றிலர்
தோண்டுவார் x தோண்டார்
நடந்தாய் x நடந்திலை
நடுங்கின x நடுங்கிற்றில
நடுங்கும் x நடுங்கா
நின்றான் x நின்றிலன்
நிற்பாள் x நில்லாள்
நிற்கின்றன x நிற்கின்றில
நீந்துகின்றனர் x நீந்துகின்றிலர்
நொந்தனை x நொந்திலை
நோவு x நோகாய்
பாடுகிறாய் x பாடுகின்றிலை
பார்த்தான் x பார்த்திலன்
பார்ப்பான் x பாரான்
மடிந்தார் x மடிந்திலர்
மடிவார் x மடியார்
வந்தான் x வந்திலான்
வருகிறான் x வருகின்றிலன்
வருவான் x வாரான்
வரும் x வாரா
வருகின்றன x வருகின்றில
வாழ்வாய் x வாழாய்
விட்டன x விட்டில
விடும் x விடா
வீழ்ந்தேன் x வீழ்ந்திலேன்
வீழ்வேன் x வீழேன்
வெந்தார் x வெந்திலர்
வைக்கிறார் x வைக்கின்றிலர்
இடும்பை xஇன்பம்

## அகப்பொருள் இலக்கண அட்டவணை

**I. முதற்பொருள் அட்டவணை:**

| முதற்பொருள் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|
| **இடம்** | மலை & மலை சார்ந்த இடம் | காடு & காடு சார்ந்த இடம் | வயல் & வயல் சார்ந்த இடம் | கடல் & கடல் சார்ந்த இடம் | மணல் & மணல் சார்ந்த இடம் |
| **பெரும்பொழுது** | கூதிர் காலம் & முன்பனிக்காலம் | கார் காலம் | ஆறு பெரும் பொழுதுகள் | ஆறு பெரும் பொழுதுகள் | இளவேனில், முதுவேனில் பின்பனி |
| **சிறுபொழுது** | யாமம் | மாலை | வைகறை | எற்பாடு | நண்பகல் |

**பெரும் பொழுதுகள்:** 1. கார்காலம் - ஆவணி, புரட்டாசி 2. கூதிர் (குளிர்) காலம் - ஐப்பசி, கார்த்திகை 3. முன்பனி – மார்கழி, தை 4. பின்பனி – மாசி, பங்குனி 5. இளவேனில் - சித்திரை, வைகாசி 6. முதுவேனில் - ஆனி, ஆடி.

**II. கருப்பொருள் அட்டவணை:**

| கருப்பொருள் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|
| தெய்வம் | முருகன் | திருமால் | இந்திரன் | வருணன் | கொற்றவை |
| மக்கள் | வெற்பன், குறவன், குறத்தியர் | தோன்றல், ஆயர், ஆய்ச்சியர் | ஊரன்,உழவர், உழத்தியர் | சேர்ப்பன், பரதர், பரத்தியர் | எயினர், எயிற்றியர் |
| உணவு | மலைநெல், தினை | வரகு, சாமை | செந்நெல் | மீனும், மீன்-உப்பு விற்பதால் வரும் பொருளும் | சூறையாடலால் வரும் பொருள் |
| விலங்கு | புலி, கரடி, சிங்கம் | முயல், மான் | எருமை, நீர்நாய் | முதலை, சுறா | வலியிழந்த யானை, புலி |
| பூ | குறிஞ்சி, காந்தள் | முல்லை, தோன்றி | செங்களுநீர், தாமரை | தாலை, நெய்தல் | குரவம், பாதிரி |
| மரம் | அகில், வேங்கை | கொன்றை, காயா | காஞ்சி, மருதம் | புன்னை | பாலை, இருப்பை |
| பறவை | கிளி, மயில் | காட்டுக்கோழி, மயில் | நாரை, நீர்க்கோழி | நீர்க்காக்கை, அன்னம் | புறா, பருந்து |
| ஊர் | சிறு குடி | பாடி, சேரி | பேரூர், மூதூர் | பட்டினம், பாக்கம் | குறும்பு |
| நீர் | அருவி, சுனைநீர் | காட்டாறு | மனைக்கிணறு, பொய்கை | மணற்கிணறு, உவர்க்கழி | வற்றிய சுனை, கிணறு |
| பறை | தொண்டகம் | ஏறுகோட்பறை | மணமுழா, நெல்லரிகிணை | மீன்கோட்பறை | துடி |
| யாழ் | குறிஞ்சி யாழ் | முல்லை யாழ் | மருத யாழ் | விளரி யாழ் | பாலை யாழ் |
| பண் | குறிஞ்சிப் பண் | சாதாரிப் பண் | மருதப் பண் | செவ்வழிப் பண் | பஞ்சுரப் பண் |
| தொழில் | தேனேடுத்தல், கிழங்கு அகழ்தல் | ஏறு தழுவுதல், நிரை மேய்த்தல் | நெல்லரிதல், களை பறித்தல் | மீன் பிடித்தல், உப்பு விளைத்தல் | வழிப்பறி, நிரை கவர்தல் |

**III. உரிப்பொருள் அட்டவணை:**

| குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|
| கூடலும் கூடல் நிமித்தமும் | இருத்தலும் இருத்தல் நிமித்தமும் | ஊடலும் ஊடல் நிமித்தமும் | இரங்கலும் இரங்கல் நிமித்தமும் | பிரிதலும் பிரிதல் நிமித்தமும் |

## மரபுப் பிழைகள், வழூஉச் சொற்கள் நீக்குதல்

**பறவை விலங்குகளின் இளமைப் பெயர்கள்**

அணிற்பிள்ளை, எலிக்குட்டி, பன்றிக்குட்டி, நாய்க்குட்டி
குருவிக்குஞ்சு, கோழிக்குஞ்சு, பூனைக்குட்டி, சிங்கக்குருளை
பசுங்கன்று, மான்கன்று, பன்றிக்குட்டி, கீரிப்பிள்ளை
யானைக்கன்று, ஆட்டுக்குட்டி, எருமைக்கன்று, குரங்குக்குட்டி
கழுதைக்குட்டி, குதிரைக்குட்டி, புலிப்பறழ்

**விலங்குகளின் வாழிடங்கள்**

ஆட்டுப்பட்டி, குதிரைக்கொட்டில், கோழிப்பண்ணை, மாட்டுத்தொழுவம், யானைக்கூடம்
வாத்துப்பண்ணை

**தாவரங்களின் உறுப்புப் பெயர்கள்**

சோளத்தட்டு, தாழைமடல், வாழையிலை, வேப்பந்தழை
மூங்கில் இலை, கமுகங்கூந்தல், தென்னையோலை, பனையோலை
மாவிலை, நெற்றாள் (நெல்தாள்), முருங்கைக்கீரை, பலா இலை
ஈச்ச ஓலை, அவரைப்பிஞ்சு, தென்னங்குரும்பை, முருங்கைப்பிஞ்சு
கத்திரிப்பிஞ்சு, வாழைக்கச்சல், கொய்யாபிஞ்சு, பலாமூசு
மாவடு, வெள்ளரிப்பிஞ்சு

**செடி, கொடி, மரங்களின் தொகுப்புப் பெயர்கள்**

பூஞ்சோலை, சவுக்குத்தோப்பு, வாழைத்தோட்டம், மாந்தோப்பு
கருப்பங்கொல்லை, சோளக்கொல்லை, பனந்தோப்பு, வேலங்காடு

தேயிலைத்தோட்டம் ஆலங்காடு தென்னந்தோப்பு பலாத்தோப்பு

**பொருள்களின் தொகுப்புப் பெயர்கள்**

ஆட்டுமந்தை பசுநிரை வீரர்படை திராட்சைக்குலை
எறும்புச்சாரை யானைக்கூட்டம் கற்குவியல் வைக்கோல்போர்
மாட்டு மந்தை

**பறவை எழுப்பும் ஒலி**

ஆந்தை அலறும் கோழி கொக்கரிக்கும் குயில் கூவும் காகம் கரையும்
கிளி கொஞ்சும்/பேசும் கோட்டான் குழறும் வாத்து கத்தும் குருவி கீச்சுடும்
மயில் அகவும் கூகை குழறும் வண்டு முரலும் புறா குனுகும்
சேவல் கூவும் வானம்பாடி பாடும்

**விலங்குகள் எழுப்பும் ஒலி**

நாய் குரைக்கும் நரி ஊளையிடும் யானை பிளிறும் புலி உறுமும்
குதிரை கனைக்கும் எருது எக்காளமிடும் பன்றி உறுமும் எலி கீச்சிடும்
சிங்கம் முழங்கும்/கர்சிக்கும் குரங்கு அலப்பும் ஆடு கத்தும் பூனை கீலும்
கழுதை கத்தும்

**பெயருக்கேற்ற வினைச் சொற்கள்**

அப்பம் தின் ஏர் உழு வெற்றிலை தின் விதையை விதை
திரியைக் கொளுத்து நார் கிழி விடை கூறு சந்தனம் பூசு
களை பறி இலை பறி சோறு சமை கோலம் இடு
நெல் தூற்று கல் உடை அம்பை எய் விதையை விதை
கதிர் அறு நீர் பாய்ச்சு சோறு உண் நாற்று நடு
காய்கறி அரி பாட்டுப்பாடு கிளையை ஒடி மலர்கொய்
பழம் தின் கோலம் இடு மரம்வெட்டு நீர் குடி
கூரைப் வேய் தயிர்கடை உணவு உண் விளக்கை ஏற்று
குடம் வனை விளக்கேற்று கட்டுரை எழுது பாய்பின்னு
பால் பருகு கவிதை இயற்று தீ முட்டு படம் வரை
உணவு பரிமாறு

**வினை மரபு**

சோறு உண்டான் முறுக்குத் தின்றான் பால் பருகினான் தண்ணீர் குடித்தான்
பூ பறித்தான் மாலை தொடுத்தாள் ஓவியம் புனைந்தாள் கூடை முடைந்தார்
பாய் பின்னினார் ஆடை நெய்தார் சுவர் எழுப்பினான் மரம் வெட்டினான்
உமி கருக்கினான் அம்பு எய்தார் மாத்திரை விழுங்கினான் செய்யுள் இயற்றினான்

**வழூஉச் சொற்களை நீக்குதல்**

| கொச்சைச் சொல் | சரியான சொல் |
|---|---|
| அண்ணாக்கயிறு | அரைஞாண்கயிறு |
| அட மழை | அடை மழை |
| தாவாரம் | தாழ்வாரம் |
| முழுங்கு | விழுங்கு |
| அவைகள் | அவை |
| எடஞ்சல் | இடைஞ்சல் |
| எலிமிச்சம் பழம் | எலுமிச்சை பழம் |
| கடப்பாறை | கடப்பாரை |
| கத்திரிக்காய் | கத்தரிக்காய் |
| கைமாறு | கைம்மாறு |
| வெண்ணீர் | வெந்நீர் |
| இன்னிக்கு | இன்றைக்கு |
| எண்ணை | எண்ணெய் |
| கழட்டு | கழற்று |
| துகை | தொகை |
| சிகப்பு | சிவப்பு |
| பண்டகசாலை | பண்டசாலை |
| புண்ணாக்கு | பிண்ணாக்கு |
| ரொம்ப | நிரம்ப |
| வத்தல் | வற்றல் |
| வெண்ணை | வெண்ணெய் |
| பசும்பால் | பசுப்பால் |
| வலதுபக்கம் | வலப்பக்கம் |
| பேரன் | பெயரன் |
| பேத்தி | பெயர்த்தி |
| வேர்வை | வியர்வை |
| நாகரீகம் | நாகரிகம் |
| சிலவு | செலவு |
| சாணி | சாணம் |
| பாவக்காய் | பாகற்காய் |
| உசிர் | உயிர் |
| ஊரணி | ஊருணி |
| கடகால் | கடைக்கால் |
| வண்ணாத்திப்பூச்சி | வண்ணத்துப்பூச்சி |
| கோர்வை | கோவை |
| திருவாணி | திருகாணி |
| வேர்வை | வியர்வை |
| முயன்றான் | முயன்றார் |
| சுவற்றில் | சுவரில் |
| துன்னூறு | திருநீறு |
| சீயக்காய் | சிகைக்காய் |

| பேச்சு வழக்கு | எழுத்து வழக்கு |
|---|---|
| கோர்த்து | கோத்து |
| சுவற்றில் | சுவரில் |
| நாட்கள் | நாள்கள் |
| மனதில் | மனத்தில் |
| பதட்டம் | பதற்றம் |
| சிலவு | செலவு |
| அருகாமையில் | அருகில் |

**கொச்சைச் சொற்களும் திருத்தியச் சொற்களும்**

அருகாமையில் நில் - அருகில் நில்
இடது கை வலிக்குது - இடக்கை வலிக்கிறது

| | | | | |
|---|---|---|---|---|
| கொடக்கூலி குடு | - | குடிக்கூலி கொடு | அதிகமாச் சிலவு செய்யாதே - | அதிகமாச்செலவு செய்யாதே |
| நேத்து வவுத்து வலி | - | நேற்று வயிற்று வலி | | |

**பிறமொழிச் சொற்களை நீக்குதல்**

| அயற்சொல் | தமிழ்ச்சொல் |
|---|---|
| அசல் | முதல் |
| அபாயம் | பேரிடர் |
| அனுபவம் | பட்டறிவு |
| அனுமதி | இசைவு |
| ஆதவன் | ஞாயிறு |
| ஆரம்பம் | தொடக்கம் |
| ஆஸ்தி | சொத்து |
| ஆயுள் | வாழ்நாள் |
| இம்சை | துன்பம் |
| இருதயம் | நெஞ்சம் |
| ஈசன் | இறைவன் |
| உபசரித்தல் | விருந்தோம்பல் |
| உபயம் | திருப்பணியாளர் - கொடை |
| உஷார் | எச்சரிக்கை |
| உபாத்தியாயர் | ஆசிரியர் |
| எதார்த்தம் | இயல்பு |
| ஐதீகம் | உலக வழக்கு |
| காகிதம் | தாள் |
| கர்வம் | செருக்கு |
| கிராமம் | சிற்றூர் |
| ஜகதி | சிறையாளி |
| சுபை | ஆவை |
| சாதம் | சோறு |
| சிபாரிசு | பரிந்துரை |
| சேவை | தொண்டு |
| ஜாக்கிரதை | விழிப்பு |
| தகவல் | செய்தி |
| தினம் | நாள் |
| நிபுணர் | வல்லுநர் |
| பத்திரிகை | செய்தித்தாள் |
| பூஜை | வழிபாடு |
| பேட்டி | நேர்காணல் |
| விபூதி | திருநீறு |
| விவாதம் | உரையாடல் |
| வைத்தியர் | மருத்துவர் |
| அங்கத்தினர் | உறுப்பினர் |
| அதிகாரி | அலுவலர் |
| அதிபர் | தலைவர் |
| அந்நியர் | அயலார் |
| அபிஷேகம் | குடமுழுக்கு |
| அபூர்வம் | புதுமை |
| அர்த்தம் | பொருள் |
| அலங்காரம் | ஒப்பனை |
| அவசரம் | விரைவு |
| அனுமதி | இசைவு |
| ஆபத்து | இடர் |
| ஆரம்பம் | தொடக்கம் |
| ஆராதனை | வழிபாடு |
| இருதயம் | நெஞ்சு |
| உத்தரவு | கட்டளை |
| உபயோகம் | பயன் |
| உற்சாகம் | ஊக்கம் |
| கவனம் | கருத்து |
| கிரீடம் | மணிமுடி |
| குமரன் | புதல்வன் |
| குபேரன் | பெருஞ்செல்வன் |
| கோபம் | சினம் |
| விஞ்ஞானம் | அறிவியல் |
| விரதம் | நோன்பு |
| சாவி | திறவுகோல் |
| சந்தா | கட்டணம் |
| பதில் | விடை |
| ஜாதி | இனம் |
| காகிதம் | தாள் |
| சங்கம் | மன்றம் |
| சந்தேகம் | ஐயம் |
| சபதம் | சூளுரை |
| சரித்திரம் | வரலாறு |
| சிகிச்சை | மருத்துவம் |
| சித்திரம் | ஓவியம் |
| சின்னம் | அடையாளம் |
| தினசரி | நாள்தோறும் |
| தீபம் | விளக்கு |
| நஷ்டம் | இழப்பு |
| நாயகன் | தலைவன் |
| பயம் | அச்சம் |
| பரீட்சை | தேர்வு |
| பிரச்சினை | சிக்கல் |
| புத்தி | அறிவு |
| போதனை | கற்பித்தல் |
| மந்திரி | அமைச்சர் |
| முக்கியம் | முதன்மை |
| விநாடி | நோடி |
| வேதம் | மறை |
| காகிதம் | தாள் |
| மைதானம் | திடல் |
| ஜாமீன் | பிணை |
| குபேரன் | பெருஞ்செல்வன் |
| மாமூல் | வழக்கம் |
| நாஷ்டா | காலை உணவு |
| ரத்து | நீக்கம் |
| பைசல் செய் | தீர்த்து வை |
| ஜனங்கள் | மக்கள் |
| ஜில்லா | மாவட்டம் |
| கஜானா | கருவூலம் |
| சர்க்கார் | அரசு |
| அமல் | நடைமுறை |
| உபந்நியாசம் | சமயச் சொற்பொழிவு |
| பந்துமித்திரர் | சுற்றம், நட்பு |
| ஆசீர்வதித்தல் | வாழ்த்துதல் |
| கமலம் | தாமரை |
| விஷம் | நஞ்சு |
| புஷ்பம் | மலர் |
| பஜனை | கூட்டு வழிபாடு |
| நமஸ்காரம் | வணக்கம் |
| கோஷ்டி | கூட்டம் |
| குமாஸ்தா | எழுத்தர் |
| சம்பிரதாயம் | மரபு |
| தாலுகா ஆபீசு | வட்டாட்சியர்அலுவலகம் |
| பஜார் | கடைத்தெரு |
| உத்தியோகம் | அலுவல் |
| பண்டிகை | திருவிழா |
| வெள்ளம் | நீர்ப்பெருக்கு |
| வியாபாரம் | வணிகம் |
| அசல் | மூலம் |
| அச்சன் | தந்தை |
| ஜமக்காலம் | விரிப்பு |
| வேடிக்கை | காட்சி |

## ஓரெழுத்து ஒரு மொழி

அ - அழகு, மனிதன், முதலெழுத்து
ஆ - பசு, இரக்கம், வியப்பு, ஆன்மா, ஆச்சரியம்
ஈ - பூச்சி வகை, வண்டு, கொடு, தேனீ, அம்பு
உ - சிவன், சுட்டெழுத்து
ஊ - இறைச்சி, தசை
ஏ - அம்பு, உயர்ச்சி
ஐ - அழகு, தலைவன், வியப்பு, அசை
ஒ - உயர்வு
ஓ - வியப்பு, வினா, மதகு (நீர் தங்கும் பலகை)
கா - சோலை
கீ - கிளிக்குரல்
கூ - பூமி
கை - உடல் உறுப்பு
கோ - அரசன், தலைவன்
சா - சாதல், இறப்பு, பேய்
சீ - வெறுப்புச் சொல், சீழ், சளி, திருமகள்
சே - எருது, வெறுப்புச் சொல், சிவப்பு
சோ - மதில், அரண்
தா - கொடு, தருதல்
தீ - நெருப்பு, அறிவு, தீமை
து - உண், துன்பம்
தூ - தூய்மை, வெண்மை
தே - கடவுள், கொள்ளுதல்
தை - மாதம்
நா - நாக்கு, நடு, சொல், தராசு
நீ - நீ, நீங்குதல்
நு - அணிகலன், யானை, எள்
நே - அன்பு, நேயம்
நை - வருந்து, துன்பம், நைதல்
நொ - வருந்து, துன்பம், நோய்
நோ - துன்பம், நோய், நோதல்
பா - பாட்டு, நிழல், அழகு
பூ - மலர்
பே - அச்சம், நுரை, மேகம், அழகு
பை - கைப்பை, பச்சைப் பாம்பின் படம், பசுமை, இளமை, அழகு,நன்கு பயிலுதல்
போ - செல், போதல்
ம - இந்திரன்
மா - மர வகை, பெரிய, விலங்கு
மீ - மேலே, மேலிடம், ஆகாயம்
மூ - மூப்பு(முதுமை)
மே - மேல், அன்பு, மேம்பாடு, மேவு, மேன்மை
மை - கண்மை, கருமை, பாவம், குற்றம்
மோ - முகர்தல், மொள்ளுதல், மோத்தல்
யா - மர வகை, ஐயம், யாத்தல், அகலம், பிணித்தல், கட்டுதல், செய்யுள் இயற்றுதல்
வா - வருகை, வரவு
வீ - மலர், பூ, அழிதல், உதிரும் பூ
வே - ஒற்று, வேதல், எரிதல்
வை - வைத்தல், கூர்மை, வையகம், வைக்கோல்
வெள - வவ்வுதல், கவ்வுதல், கவர்தல்

## ஒலி வேறுபாடறிந்து சரியான பொருள் கூறுதல்

### ண, ன வேறுபாடு

| | |
|---|---|
| அண்ணம் - மேல்வாய் | அன்னம் - பறவை |
| ஆணை - கட்டளை | ஆனை - யானை |
| உண் - சாப்பிடு | உன் - உன்னுடைய |
| காண் - பார் | கான் - காடு |
| தண்மை - குளிர்ந்த | தன்மை - இயல்பு |
| நாண் - கயிறு | நான் - யான் |
| பணி - வேலை | பனி - குளிர் |
| மணம் - நறுமணம் | மனம் - உள்ளம் |
| ஊண் - சோறு | ஊன் - இறைச்சி |
| கணி - எண்ணுதல் | கனி - பழம் |
| கண்ணி - அரும்பு, பூமாலை | கன்னி - குமரி |
| திண்மை - வலிமை | தின்மை - தீமை |
| வண்மை - ஈகை,கொடை | வன்மை - ஆற்றல்/உறுதி |
| புனை - அலங்கரி | புணை - தெப்பம் |

### ர, ற வேறுபாடு

| | |
|---|---|
| அரம் - ஒரு கருவி | அறம் - தர்மம் |
| அரி - வெட்டு | அறி - தெரிந்து கொள் |
| ஆர - நிறைய | ஆற - தணிய |
| இர - இரப்பு, யாசித்தல் | இற - இறப்பு |
| இரை - தீனி, உணவு | இறை - கடவுள் |
| பொரி - வறு | பொறி - இயந்திரம் |
| பொருப்பு - மலை | பொறுப்பு - கடமை |
| மருகு - அழகு | மறுகு - முதிர்தல் |
| பரி - குதிரை | பறி - பிடுங்குதல் |
| மருப்பு - தந்திரம் | மறுப்பு - எதிர்ப்பு |
| உரவு - வலிமை | உறவு - சுற்றம் |
| உரு - வடிவம் | உறு - மிகுதி |
| உரை - சொல் | உறை - மூடி |
| ஊர - நகர | ஊற - சுரக்க |
| எரி - தீ, நெருப்பு | எறி - வீசு |
| கரை - ஓரம் | கறை - அழுக்கு |
| பரவை - கடல் | பறவை - பறப்பது |
| அரை - பாதி,பகுதி | அறை - வீட்டில் ஒரு பகுதி |
| உரி - கழற்று | உறி - தயிர் மோர் வைப்பது |
| மாரி - மழை | மாறி - வேறுபாடு |
| வருத்தல் - துன்பப்படுதல் | வறுத்தல் - வேகவைத்தல் |
| புரம் - வரிசை | புறம் - வெளி |
| நிரை - வரிசை | நிறை - நிறைவு |
| சொரி - பொழிதல் | சொறி - அரிப்பு,சிரங்கு |
| உரல் - இடிக்கும் உரல் | உறல் - பொருத்துதல் |
| ஏரி - நீர் நிலை | ஏறி - மேலே ஏறி |
| கரி - அடுப்புக் கரி | கறி - காய்கறி |
| குரைத்தல் -நாய்குரைத்தல் | குறைத்தல் - சுருங்குதல் |
| செரித்தல் - சீரணமாதல் | செறித்தல் - திணித்தல் |
| தரி - அணிந்து கொள் | தறி - வெட்டு |
| திரை — அலை | திறை - கப்பம் |
| மரம் - தரு | மறம் - வீரம் |
| சீரிய - மேலான | சீறிய - கோபித்த |
| மரி - இற | மறி - மான் குட்டி, இடை மறித்தல் |
| மரு - மணம் | மறு - தடு, குற்றமான |
| விரல் - கை விரல் | விறல் - வெற்றி |
| இரும்பு - ஒரு உலோகம் | இறும்பு - குறுங்காடு |
| ஒருத்தல் -யானை | ஒறுத்தல் - கோபித்தல் |

| லகரம் | ளகரம் | ழகரம் |
| --- | --- | --- |
| அலை - கடல் அலை | அளை - குகை | அழை - கூப்பிடுதல் |
| அலகு - பறவை மூக்கு | அளகு - காட்டுக்கோழி, பெண்மால் | அழகு - வனப்பு, அணி, கவின் |
| அலி - திரு நங்கை | அளி - கொடு, கருணை | அழி - அழித்தல் |
| அலம் - கலப்பை | அளம் - உப்பளம் | ----------------- |
| ஆல் - ஆலமரம் | ஆள் - நபர், ஆளுதல் | ஆழ் - மூழ்கு |
| ஆலி - மழைத்துளி | ஆளி - விலங்கு | ஆழி - கடல் |
| இலை - முற்றிய தளிர் | இளை - மெலிதல் | இழை - நூல் |
| உலவு - திரிதல், நடமாடு | உளவு - வேவு | உழவு - பயிர்த்தொழில் |
| உலை - சோறு உலை | உளை - சேறு, பிடரி மயிர் | உழை - மான், உழைத்தல் |
| ------------------ | உளி - கருவி | உழி - இடம் |
| உல்கு - சுங்கம் | உள்கு - நினை | ----------------- |
| எல் - கதிரவன், சூரியன், பகல் | எள் - எண்ணெய் வித்து, தானியம் | ----------------- |
| ஒலி - சத்தம் | ஒளி - வெளிச்சம் | ஒழி - நீக்கு |
| கலை - நுண் கலை, ஆண்மான் | களை - வேண்டத பயிர் | கழை - மூங்கில் |
| வால் - விலங்கின் உறுப்பு | வாள் - கருவி | வாழ் - வாழ்தல் |
| கல் - செங்கல் | கள் - மது | ------------------ |
| கலம் - கப்பல் | களம் - இடம் | ------------------ |
| கலங்கு - கலக்கம் | ---------------------- | கழங்கு - மகளிர் விளையாட்டுப்பொருள் |
| கலி - ஓசை | களி - மகிழ்ச்சி | கழி - தடிஃ கோல், உப்பங்கழி |
| காலை - நாளின் முற்பகுதி | காளை - எருது | ------------------ |
| காலி - பசுக்கூட்டம் | காளி - தெய்வம் | காழி - மலம் |
| கொலை - கொல்லுதல் | கொளை - பாட்டு | ------------------ |
| குலம் - குடி | குளம் - நீர் நிலை | ------------------ |
| ----------------- | குளம்பு - விலங்கு உறுப்பு | குழம்பு - மோர்க் குழம்பு |
| குலவி | குளவி - வண்டு | குழவி - குழந்தை |
| ----------------- | குளி - நீராடு | குழி - பள்ளம் |
| கொல் - கொல்லுதல் | கொள் - பெற்றுக் கொள் | ------------------ |
| கூலி - சம்பளம் | கூளி - பேய் | ------------------ |
| கோல் - ஊன்று கோல் | கோள் - புறங்கூறல் | ------------------ |
| சூலை - நோய் | சூளை - செங்கல் சூளை | ------------------ |
| சூல் - கருப்பம் | சூள் - சபதம் | சூழ் - சுற்று |
| தவலை - பாத்திரம் | தவளை - விலங்கு | ----------------- |
| தலை - உடல் உறுப்பு | தளை - கட்டு | தழை - இலை |
| தால் - நாக்கு | தாள் - பாதம், திருவடி | தாழ் - பணிந்து போ, தாழ்ப்பாழ் |
| துலை - தராசு | துளை - துவாரம் | ----------------- |
| தோல் - சருமம் | தோள் - புயம் | ----------------- |
| பசலை - மகளிர் நிற வேறுபாடு | பசளை - ஒரு கொடி | ----------------- |
| பால் - பசும்பால் | பாள் - தாழ்ப்பாள் | பாழ் - பாழாதல் |
| பொலி - அழகு | பொளி - கொத்து | ------------------ |
| நலி - வருந்து | நளி - நடுக்கம் | ----------------- |
| நல்லார் - நல்லவர் | நள்ளார் - பகைவர் | ----------------- |
| ----------------- | பொளி - கொத்து | பொழி - ஊற்று |
| வெல்லம் - இனிப்புக்கட்டி | வெள்ளம் - நீர்ப்பெருக்கு | ------------------- |
| வேலை - பணி | வேளை - பொழுது | ------------------- |
| வலு - பலம் | ------------------------ | வழு - குற்றம் |
| வலி - துன்பம், வலிமை | வளி - காற்று | வழி - பாதை |
| வாலை - இளமை | வாளை - மீன் வகை | வாழை - தாவர வகை |
| ---------------------- | விளி - அழை | விழி - கண், கண் திற |

## ஆங்கிலச் சொல்லுக்கு தமிழ்ச் சொல் தருதல்

| ஆங்கில எழுத்து | தமிழ் எழுத்து |
|---|---|
| Abstract | சுருக்கம் |
| Academy | கலைக்கழகம் |
| Accountancy | கணக்கியல் |
| Accountant | கணக்கர் |
| Acknowledgement | ஒப்புகை |
| Appendix | பின் இணைப்பு |
| Applause | ஆரவாரப் பாராட்டு |
| Appliances | துணைக் கருவிகள் |
| Biodiversity | பல்லுயிர் பெருக்கம்/பல்லுயிர் வகைமை |
| Biotechnology | உயிரி தொழில்நுட்பம் |
| Bill | சட்ட முன் வரைவு ∴ மசோதா |
| Casting vote | அறுதி வாக்கு |
| Cease-fire | போர் நிறுத்தம் |
| Censor board | தணிக்கைக் குழு |
| Censure | கண்டனம் |
| Census | மக்கள் தொகை கணக்கு |
| Centenary | நூறு, நூறாண்டு |
| Certificate | சான்றிதழ் |
| Cess | மேல்வரி, வீதவரி |
| Chalk | சுண்ணைக்கட்டி |
| Charts | விளக்கப்படங்கள் |
| Cheque | காசோலை |
| Choice | விருப்பேற்பு, உகப்பு |
| Circular | சுற்றறிக்கை |
| Circulation Note | சுற்று குறிப்பு |
| Citation | மேற்கோள், தகுதியுரை |
| Citizen | குடிமகன் |
| Civic amenities | நகர வசதிகள் |
| Civic consciousness | குடிமை நல உணர்வு |
| Civil engineer | கட்டடப் பொறியாளர் |
| Civilization | நாகரிகம் (நாகரீகம் என்பது தவறு) |
| Civil service | குடிமுறை அரசுப்பணி, குடிமைப் பணி |
| Civil suit | உரிமையியல் வழக்கு |
| Civil war | உள்நாட்டுப் போர், உள்நாட்டுக் கலகம் |
| Clamour | ஆர்ப்பரி, உரக்கக் கேள், அமளி |
| Clash | மோதுதல், கைகலப்பு, சச்சரவு |
| Class | வகுப்பு, வகை |
| Clearance certificate | தடை நீக்கச் சான்றிதழ் |
| Client | கட்சிக்காரர், சார்ந்திருக்கிறவர் |
| Climate | தட்பவெப்ப நிலை, கால நிலை |
| Cognizable offence | பிடியாணையின்றி கைது செய்வதற்குரிய வழக்கு |
| Cognizance | அறிதல்,தெரிதல், செயலாட்சி வரம்பு |
| Coherent | ஒத்திசைவான, முன்பின் பொருத்தமான |
| Collision | மோதுதல் |
| Collusion | வஞ்சக்கூட்டு உடன்படிக்கை |
| Colossal | மிகப்பெரிய, மாபெரும் |
| Commission | ஆணையம், செயல்படல், தரகு |
| Committee | குழு |
| Commodity | பண்டம் |
| Common sense | இயல்பறிவு, பொது உணர்வு |
| Common wealth | பொது வளமை |
| Communiqué | அரசு அறிவிப்பு |
| Communist | பொதுவுடைமைக் கொள்ளையர் |
| Community Development Block | சமுதாய வளர்ச்சி வட்டாரம் |
| Community Hall | சமுதாயக் கூடம் |
| Commute | மாற்றிப்பெறு, தண்டனையைக் குறை |
| Complex | எளிதற்ற, சிக்கலான, பல்கூட்டான, மனப்பான்மை, வளாகம் |
| Compound | வளாகம், மருந்து கலவை, இசைந்து தீர், சேர்மானம் |
| Condemn | பழித்துரை, கண்டி, பயனற்றதென்று கழி, எதிராகக் குற்றத்தீர்ப்பு அளி |
| Condonation | பிழைப் பொறுத்தல், மன்னிப்பு, பொருட்படுத்தாது இருத்தல் |
| Confidential Report | மந்தண அறிக்கை |
| Confiscation | பறிமுதல் |
| Confront | எதிர்த்து நில், முரண், சந்தி |
| Confusion | குழப்பம், கலக்கம் |
| Conjecture | ஊகம், உய்த்துணர்வு |
| Conscience | மனசாட்சி, உளச்சான்று |
| Conservation | பேணுகை, பாதுகாத்தல் |
| Conservator | காப்பாளர் |
| Consignee | சரக்குப் பெறுபவர், பண்டம் பெறுபவர் |
| Convene | கூட்டு, அழை |
| Convenience | வாய்ப்பு நலம் |
| Convention | வழக்காறு, மரபு, அவை |
| Conversant | பழகி அறிந்த கற்றுணர்ந்த, அறிமுகமான |
| Conveyance | ஊர்தி, செல்கலம், வண்டி |
| copy | படி நகல் |
| Copy right | பதிப்புரிமை |
| Corridor | நடைக்கூடம், இடைவழி |
| Cost | விலை, செலவு |
| Counterfoil | அடிச்சீட்டு, மறுபாதி |
| Counter part | நிகரானப் பகுதி |
| Counter petition | எதிர் மனு |
| Coupon | கைச்சீட்டு, அடையாளச் சீட்டு |
| Courier | தூது அஞ்சல் |
| Editing | பதிப்பித்தல், திருத்தி அமைத்தல், தொகுத்து அதைத்தல் |
| Edition | பதிப்பு |
| editor | பதிப்பாசிரியர், இதழாசிரியர் |
| Fine | தண்டம், தண்டப்பணம், நேர்த்தியான, செப்பமுடைய |
| Fire Brigade | தீயணைப்பு படை |
| Fire engine | தீயணைப்பு ஊர்தி |
| Fire extinguisher | தீயணைப்பான் |
| Fire insurance | தீ ஈட்டுறுதி |
| Firka | குறு வட்டம், உள் வட்டம் |
| Firm | நிறுவனம், உறுதியான, நிலையான |
| fixation | அறுதியிடல் |
| Gain | ஆதாயம், ஊதியம் |
| Gallery | படியடுக்கு மேடை, கூடம், சுரங்க நிலவறை வழி |
| Garage | வண்டிக்கொட்டில், வண்டி பழுது பார்க்கும் குச்சில் |
| Gazette | அரசிதழ் |
| Gazetted officer | அரசிதழ்ப் பதிவுபெற்ற அலுவலர் |
| Gazetteer | விவரச் சுவடி |
| General body | பொதுக் குழு |
| General knowledge | பொது அறிவு |
| General review | பொது ஆய்வு |
| General survey | பொது நோட்டம் |
| Generation | தலைமுறை |
| genius | மேதை |
| Gentleman | பெருமகன், பண்பாளர், நற்குடியாளர் |
| Genuine | மெய்யான |
| Germs | நோய் நுண்மங்கள் |
| Glance | மேலோட்டப் பார்வை |
| Godown | கிடங்கு |
| Governor | ஆளுநர் |

Grammar இலக்கணம்
Grant மானியம்
Grants-in-Aid உதவி மானியம்
Gratuity பணிக்கொடை
Grave allegation கடுஞ் சாட்டுரை
Grave charges கடுங் குற்றச்சாட்டு
Grazing மேய்ச்சல், மேய்தல்
Grease மசகு
Grievance மனக்குறை
Gross income மொத்த வருமானம்
Ground water நிலத்தடி நீர்
Group discussion குழுக் கலந்தாய்வு
Gulf வளைகுடா
Mischief குறும்புத்தனம்
Nominal பெயரளவில்
Nominal rent உரிய வாடகை
Nominal price உரிய விலை
Nomination நியமனம், பெயர் குறிப்பிடு, வேட்பு மனு
Nomination paper வேட்பு மனு
Optimistic நம்பிக்கையுடைய, தெருள் நோக்குடைய
Patent காப்புரிமை
Patriotism நாட்டுப்பற்று
Patron புரவலர், காப்பாளர்
personation ஆள் மாறாட்டம் செய்தல்
personnel பணியாளர்
Perspective plan தொலைநோக்குத் திட்டம்
Perspiration வியர்வை, வியர்த்தல்
Perusal பார்வையிடல்
Pessimist தோல்வி மனப்பான்மையர், நம்பிக்கையற்றவர், மருள் நோக்கினர்
Poster விளம்பரத் தட்டி (தோரணை)
Proof ஒப்பச்சு, பார்வைப் படி, எண்பிப்பு, சான்று
Proof reader ஒப்பச்சர்
Proposal கருத்துரு, செயற்குறிப்பு
proposition கூற்று, கருத்து
Prorogation (சட்ட மன்றக்) கூட்டத்தொடர் முடிவு
Parliament நாடாளுமன்றம் (பாராளுமன்றம் என்பது பொருட்பிழை)
Prudence முன்மதி, உலகியல் அறிவு
Public Accounts Committee பொதுக் கணக்குக் குழு
Publications வெளியீடுகள்
Ragging பகடி வதை
Session court குற்றவியல் அமர்வு நீதி மன்றம், குற்றவியல் தொடர் விசாரணை மன்றம்
Session judge குற்றவியல் அமர்வு நீதிபதி, குற்றவியல் தொடர் விசாரணை நடுவர்
Shrinkage சுருங்களவு, கரிப்பு
Since இருந்த, பின்னாக என்ற காரணத்தால், அதன் பயனாக
Sine-die நாள் குறிப்பிடாமல்
Slum clearance board குடிசைப் பகுதி மாற்று வாரியம்
Skill தேர்ச்சி திறம், செயல் திறம்
Slang கொச்சை வழக்கு
Smart மிடுக்கான, வினைத்திறமிக்க, சுறுசுறுப்பான
Smash தகர்வு, மோதி நொறுக்கு
Smith கொல்லர்
Sneeze தும்மல், தும்மு
Socialism சமதர்மம்
Social justice சமூக நீதி
Soil conservation மண் வளப் பாதுகாப்பு
Soil erosion மண் அரிப்பு
Special allowance சிறப்புப் படி

Special case தனி நேர்வு
Special drive தனி முயற்சி
Special duty தனிப்பணி
Special jail தனிச்சிறை
Special leave சிறப்பு விடுப்பு
Special officer சிறப்பு அலுவலர்
Special pay சிறப்பு ஊதியம்
Stationary இடம் பெயராத, நிலையிருப்பான
Stationery எழுது பொருட்கள்
Statue உருவச்சிலை, படிகம்
Status தகுதி நிலை, தகு நிலை, சமுதயாப்படி நிலை
Status quo நடைமுறை நிலை
Statutory powers சட்டப்படியான அதிகாரங்கள்
Steamer நீராவிக் கப்பல்
Steering committee வழிப்படுத்தும் குழு, இயக்கக் குழு
Step mother மாற்றாந்தாய்
Stereo பேரொலிக் கருவி
Sterilization மலடாக்கம், நோய் நுண்ம ஒழிப்பு
Stipend பயிற்சிக்கால உதவித்தொகை
Tally ஒத்திசைவாக்கு, நேர் செய்தல், சரி செய்தல்
Taluk வட்டம்
Tapal அஞ்சல்
Target இலக்கு, குறியீடு
Task இடுபணி, கடும் உழைப்பு, கடமைப் பொறுப்பு
Taxation வரி வதிப்பு
Tax collection வரித் தண்டல்
Tax collector வரித் தண்டலர்
Taxi வாடகை சீருந்து
Taxidermy தோற்பாவைக் கலை
Tea party தேநீர் விருந்து
Teapoy சிறு மேசை
Tele communication தொலைத்தொடர்பு
Telegram தந்தி, தந்திச் செய்தி
Telegraphy தந்தி அனுப்பு, தந்தி முறை
Telephone தொலைபேசி
Telephone booth தொலைபேசிச் சாவடி
Teleprinter தொலை தட்டச்சுப் பொறி
Telex தொலையச்சு
Teller காசாளர்
Temple trustee அறங்காவலர்
Tenancy act குடிவாரச் சட்டம்
Tendency போக்கு, சார்பு
Tender ஒப்பந்தப் புள்ளி
Tension விறைப்பு, அமளி, நெருக்கடி, மன உளைச்சல்
Tentative ஆய்நிலையான, தற்காலிகமான
Tenure பதவிக்காலம்
Toddy கள்
Toll gate சுங்கச்சாவடி
Torture சித்ரவதை
Toss சுண்டி எறி, அலைக்கழி
Vendor விற்பவர்
Venereal disease பால்வினை நோய்
Verge ஓரம், விளிம்பு, எல்லை
Veto தடை உரிமை ∴ மறுப்புரிமை
Vicious circle கெடு சூழல்
Victim புலி
Video காணொலி∴ஒளிக்காட்சி
Video tape ஒளி நாடா
Vindicate கொள்கை நிலை நாட்டு, மெய்ப்பித்துக்

| | |
|---|---|
| | காட்டு |
| Vindictive | பழிவாங்கும் இயல்புடைய |
| Violence | வன்முறை |
| Viva voce | வாய்மொழித் தேர்வு |
| Void | செல்லா நிலையது, இல்லா நிலையது |
| Voluntary retirement | விருப்ப ஓய்வு |
| Volunteer | தொண்டர், தன்னார்வர் |
| Voucher | செலவுச் சீட்டு |
| Vow | சூளுரை |
| Wages | கூலி |
| Wakf board | இஸ்லாமிய அறக்கட்டளை வாரியம் |
| Ward | தொகுதி, பிரிவு, குடும்பு |
| Warden | சிறைக்காவலர் |
| Warehouse | பண்டசாலைக் கழகம் |
| Waste land | தரிசு நிலம் |
| Water-logged | நீர் தேங்கிய |
| Water shed | நீர்ப் பிரி முகடு |
| Water tight compartments | முற்றிலும் தனிவேறான பிரிவுகள் |
| Wear and tear | தேய்வும் நைவும் |
| Weather report | வானிலை அறிக்கை |
| Weedicide | களைக்கொல்லி |
| Wheel barrow | தள்ளு வண்டி |
| Whenever necessary | தேவையானபோதெல்லாம் |
| When necessary | தேவையானபோது |
| whereas | ஆகையால், அப்படியிருக்க |
| Whirl wind | சூறாவளி |
| Wicked | கொடிய |
| Witch craft | பில்லி சூனியம் |
| Wrestling | மற்போர் |
| Writ | நீதிப் பேராணை |
| Yacht | உலாப் படகு, பந்தயப் படகு |
| Yard stick | அளவு கோல் |
| Yearn | ஆவலுள்ள, மிகு விருப்பம் |
| Yeoman service | பெரும்பணி, போற்றற்குரிய பணி, தன் விருப்பார்வப் பொதுத்தொண்டு |
| Yoke | நுகத்தடி |
| Zeal | விருப்பார்வம் |
| Zenith | மீமுகடு |
| Zero-base | தொடக்க நிலை |
| Zest | ஆர்வம் |
| Zig zag path | குறுக்கு நெடுக்கான நடைபாதை |
| Zip | பல்லிணைவுப் பட்டிகை |
| zone | மண்டலம் |

**வணிகத்துறை சொற்கள்**

| **ஆங்கிலச் சொல்** | **தமிழ்ச் சொல்** |
|---|---|
| agency | முகவாண்மை, முகவர்கள், முகமை, முகவாண்மையகம், முகவரமைப்பு |
| Agent | முகவர் |
| Air-conditioner | வளிச்சீர்மை, காற்றுப்பதனி, குளிர்பதனி, சீர்வளி |
| Antenna | கவர்க்கம்பி |
| Arcade | நடைவானப் பந்தல் |
| Asbestos | கல்நார் |
| Auditorium | கலை அரங்கம் |
| Audio centre | கேட்பொலி அகம், கேட்பொலி நடுவம், ஒலியகம், ஒலிநாடா மையம் |
| Automobiles | தானியங்கிகள், வினையகம் |
| Auto rickshaw | தானியங்கி இழுவை, தானி, தானியங்கி |
| Avenue | நிழற்சாலை, கவின்பாதை, மரம் பயில் சாலை, அகல் கவின்பாதை |
| Bakery | அடுமனை |
| Biscuit | ஈரட்டி, மாச்சில்லு |
| Buzzer | இமிரி |
| Cassette | பேழை |
| Compact disc | குறுந்தகடு |
| Emporium | விற்பனைப் பெரு நிலையம் |
| Enterprises | முனைவகம் / வணிக நடுவம் |
| Lorry | சரக்குந்து |
| Plumber | குழாய்ப் பணியாளர் |
| Polythene | ஈகநார் |
| Polythene bag | ஈகநார்ப் பை |
| Power loom | விசைத்தறி |
| Quarry | கற்சுரங்கம், கற்குடைவு |
| scooter | குதியுந்து, துள்ளுந்து |

## இலக்கணக்குறிப்பு

**தன்மை பன்மை வினைமுற்று** - துய்ப்பேம் கிளத்தினேன்

**தன்மை ஒருமை வினைமுற்று** - விடேன், வந்தனன், தீர்கிலேன், செய்குவன்

**உரிச்சொற்றொடர் -** மாநகர், தடந்தோள், மல்லல், நெடுமதில், இருநிலம், தடக்கை, மாதவர், நனிகடிது, மாமலை, உறுவேனில், மல்லலம் குருத்து நனிமணம்

**பலர்பால் வினைமுற்று —** எய்துவர் என்ப

**செய்யும் எனும் வாய்ப்பாட்டு வினைமுற்று —** படும், கெடும்

**முன்னிலை ஒருமை வினைமுற்று** - அழைத்தி, இருத்தி, நோக்கால்

**ஒன்றல்பால் வினைமுற்று**— சீர்த்த, தீண்டிற்று

**பெயரெச்சம்** - காழ்ப்ப இயற்றியார், அணைந்த வாசீகர், படர்ந்த தெண்டிரை, இருந்த வள்ளல், அமைந்த காதல், மலர்ந்தகண்ணன், சென்ன வட்டி, உற்று நோய், வந்தபொருள், பொதிந்த மெய், முதிர்ந்த மேனி, ஆய்ந்த பொற்கிழி, ஆன்ற பெருமை, படித்த விரகன், தீர்த்த செழியன், வியர்த்த வியர்வன்றோ, பார்த்த கண்ணை, வாழும் குடி, தேய்ந்த, ஆய்ந்த, காய்ந்த, பாய்ந்த

**எதிர்மறைப் பெயரெச்சம் -** பாடாத, பிறவாத, சூடாத, தாழ்ந்த, களர்ந்த

**ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் -** அலகிலா விளையாட்டு, இன்னாச்சொல், தேராக்கீரன், கேளாத்தகையவே, பழியில்லா மன்னன், கல்லா ஒருவருக்கும், எதிரிலாக் கவி, குறையாவன்கண், துவ்வாவிடம், பொல்லாக்காட்சி, எய்தாப்பழி, கொல்லாநலத்தது, சொல்லாநலத்தது, இழிந்த பிறப்பு, தீராக்காதலன், செலவொழியாவழி, பொல்லாவிளக்கம், வாராப் பொருளாக்கம், மீளா ஆள், தடக்கரி, படாரப்பஞ்சவ, அடங்காப்பசுந்துறை, தேராமன்னன், ஏகாச்சிறப்பின்கூடவா.

**வினையெச்சம் -** சென்று, உறங்கினான், புக்கு, சீத்து, படின், ஆற்றி, ஆற்றின், கோலி, நாடின், சான்று, திரிதரின், வாரி, பறித்து, நல்க, ஏந்தி, கேட்ப, போற்றி, பொதிந்து, நொந்து, உண்ணாது, கடந்து, பாய்ந்து, செறிந்து, வரைத்து, குறுகி, சேவிக்க, அறிந்து, அடைந்து, பொழிந்திழிய, எனா, கூர, ஒடி, இளைத்து, கடக்க, சொல்லி, இறைஞ்சி தேர்ந்து கொளல், வந்து எய்தினான், தொழுகு அறைகுவன்

**எதிர்மறை வினையெச்சம்** - கலிங்காது

**வினைத்தொகை:** புனைமலர், வாங்குவில், உயர்துளை, செய்தவம், வீழ்கதிர், ஆழ்நரகு, பயன்தெரிபுலவர், உருநீர், சூழ்கழல், செய்கொல்லன், செய்வினை, பொங்குகடல்,ஈன்குழவி, பொழிதருமணி, பனைதருபருமணி, வருபுனல், நிதிதருகவிகை சுடுசோறு, பாய்புனல், தேய்செருப்பு, விரிநீர், வாழ்மனல், எறிதிரை, தருபொருள், அதிர்சடை, அதிர்கடல், ஒடிமரம், ஊர்திரை, அதிர்குறள், படுதுயர்.

**வினையாலணையும் பெயர்** - அகழ்வார், இகழ்வார், ஒறுத்தார், பொறுத்தார், அஞ்சான், மாற்றார், உரவோர், செய்தாரை, இறந்தார், துறந்தார், நோற்கிற்பவர், மேற்கொள்பவர், சான்றவர், உணர்த்துவான், கேட்டார், வாட்டான், சார்ந்தவர், பற்றுவான், ஆற்றுவார், உடையான், வந்தவர், செற்றார், துணையார், ஆள்வார், பெற்றியார், சூழ்வார், தக்கார்

**செய்யா எனும் வாய்ப்பாட்டு வினையெச்சம்** - கேளா

**அல்ஈற்று வியங்கோள் வினைமுற்று**— விடல், கொளல்

**2-ம் வேற்றுமைத் தொகை —** நூல்நோக்கி, பெருமையறிந்து, பூதிசாத்தா, செவியறுத்து, அறனறிந்து, திறனறிந்து, பகைகொளல், இறுளறுக்கும், அறனீனும், கால்மடித்து, வால்குழைத்து, உயர்ச்செருத்து

**6-ம் வேற்றுமைத் தொகை —** மாறன்களிறு, என்கால், என்பெயர், நின்கைர், என்பதி, கார்குலாம், என்னுயிர், வழிக்கரை, பணிவிடம், தன்ஒன்னார், வேந்தன்பொருள், செருநர் செருக்கு, நலிப்பரப்பு.

**7-ம் வேற்றுமைத் தொகை —** தற்பிறர், முன்றேறி, செவிபுக

**2-ம் உருபும், பயனும், உடன்தொக்க தொகை —** ஆய்கொடி, கனவயடிக் கேழல், வள்ளுகிர்ப் புலி, கொலைப்புலி, தார்வேந்தன், நல்லாய், போர்க்குகன், நீர்முகில், திரைக்கங்கை, நீர்த்தடம்

**உவமைத்தொகை** - இலைவேல், மதிமுகம், தாமரைநயனம், தேன்மொழி, தாமரை முகம், அமுத மொழி, பவளவாய்,முத்துப்பல், கயற்கண், கனிஇதழ், மலரடி, தேன்தமிழ், பூவிரள், கார்தள்விரல், கயல்விழி, மதிமுகம், விற்புருவம், கனிவாய், கல்திரள்தோள், மலர்பாதம், மலர்ச்சேவடி, பூதரப்புயம்.

**உருவகம் -** பாதமலர், மருப்பூசி, மார்போலை, முகமதி, முகத்தாமரை, மொழித்தேன், வாய்ப்பவளம், பல்முத்து, தமிழமுது, கண்மலர், காமத்தீ, இன்பசொரூபம், மனக்குரங்கு, கரகமலம், மொழியமுது, கண்கயல், தமிழ்த்தேன், விரல்பூ, அடிமலர், புருவவில், செல்வச்செவிலி, திரைக்கை, தமிழ்த்தாய், நீர்வேலி.

**உம்மைத்தொகை:** அடவிமலையாறு, நாடுநகர், தாய்தந்தை, சிரமுகம்

**பண்புத்தொகை:** நீலமுடி, நன்செய், புன்செய், கொல்லுலகு, வெண்குடை, கருங்கோள், பெருந்தேன், செந்நீ, வெம்மை, நெடுமதில், செந்நாய், கருமுகில், வெண்மதி, அருந்தவர், நல்வினை, பெரும்பேறு, பில்லுயிர், தீவினை, பேரின்பம், கடுஞ்சொல், நல்லறம், செம்பொன், செங்கை, சேவடி, வெவ்விருப்பு, வன்மறவோர், நல்லொழுக்கம், தீடொழுக்கம், அருவினை, புன்கண், பெரும்பெயர், அரும்பெறல், பெருங்குடி, கடுங்கோல், செங்கோலன், நன்மொழி, செந்தமிழ், நெடுநாவாய் நெடுநீர், நன்னுதல், புண்கண், மென்கண், அருவிளை நல்கலம், நற்கறிகள், இன்னமுதம், ஒண்பொருள், எண்பொருள், நற்சங்கு, வெண்குழை, நெடுநீர், வெள்ளையாறு, பெருங்கிரி, செங்கதிர், பெருவரு, பெருஞ்சிரம், தண்டாரி, திண்டிளள், வன்மை

**அளபெடை**

1. செய்யுளிசை/இசைநிறை — உழாஅர், படாஅர், உறாஅமை
2. இன்னிசை - கெடுப்பதூஉம், எடுப்பதூஉம், உள்ளதூஉம்
3. ஒற்றளபெடை - அரங்ங்கம், சங்ங்கு, நெஞ்ஞ்சு
4. சொல்லிசை - நிசைஇ, நிறிஇ, தழிஇய

**உயர்வு சிறப்பும்மை —** நிலத்தினும், வானினும், நீரினும்

**இழிவு சிறப்பும்மை —** செய்யினும், வயிற்றுக்கும்

**இலக்கணப்போலி**

- அரைசன் - இடைப்போலி
- ஈற்றுப்போலிகள் - அறன், திறன்
- பந்தர் - பந்தல் என்பதன் கடைப்போலி

**தொகுத்தல் விகாரம்** - ஞாலமெலாம் மக்களெலாம்

**வலித்தல் விகாரம் -** ஊற்றுக்கோல் இருப்பு – ஊன்றுகோல்

**மரூஉ –** நுந்தை (நும்தந்தை என்பதன் மரூஉ)

**ஓ** - அசைச்சொற்கள்

**அவ்வூர் -** சேய்மைச்சுட்டு

**ஊ (ஊரனே)**– விளித்தொடர்

**ஒருசொல் பன்மொழி** – மீமிசை, ஓங்குயிர், வில்விறைந்து, தொழுது வணங்கினான், விழிநாட்டம், காத்து ஓம்பினான், கூன் பிறை சந்திரன்

**அன்மொழித்தொகை** – ஆய்கொடி வந்தாள், கயல்விழி வந்தாள், ஆயிழை வந்தாள், பொற்கொடி வந்தாள்

**பண்புப்பெயர்:-**
வெண்மை – நிறப்பண்புப்பெயர்
இனிப்புச்சுவை – சுவைப்பண்புப்பெயர்
வட்டவடிவம் - வடிவப்பண்புப்பெயர்
முத்தமிழ் - அளவப்பண்புப்பெயர்

| **பண்புப்பெயர்** | **விகுதிகள்** |
|---|---|
| நன்மை | மை |
| தொல்லை | ஐ |
| மாட்சி | சி |
| மாண்பு | பு |
| மழவு | உ |
| நன்கு | கு |
| நன்றி | றி |
| நன்று | று |
| நலம் | அம் |
| நன்னர் | அர் (அ) நர் |
| திட்பம் | பம் |

(மை – விகுதி பெரும்பான்மையாக வரும்)
எடுத்துக்காட்டு: செம்மைகோல், மூவேந்தர், மும்மாரி, சதுரவயல், கருங்கல், வட்டக்கிணறு, கோபம், கசப்பு, துவர்ப்பு, முக்கோணம், சதுரம், குட்டை, செவ்வகம், உயரம், உருண்டை, செம்மை, வட்டநிலா, நீள்நகர், முக்குணம்.

**தொழிற்பெயர்:-**

| தொழிற்பெயர் | விகுதிகள் |
|---|---|
| நடத்தல் | தல் |
| பாடல், ஆடல் | அல் |
| ஆட்டம், வட்டம் | அம் |
| கொலை | ஐ |
| தொழுகை, செயற்கை | ஐ |
| பார்வை | வை |
| நடப்பு | பு |
| வரவு | வு,உ |
| மறதி | தி |
| வளர்ச்சி,உணர்ச்சி | சி |
| உதவி, புலவி | வி |
| கடவுள், விக்குள் | உள் |
| சாக்காடு | காடு |
| கோட்பாடு | பாடு |
| தொற்றரவு | அரவு |
| வாரானை | ஆனை |
| கொல்லாமை, நடவாமை | மை |
| பாய்ந்து | து |
| போக்கு | கு |
| தாழால் | ஆல் |

**எ-கா:** பார்த்தல், நீங்கல், அறைதல், நோற்றல், நாட்டல், வாழ்க்கை, நலிதல், காட்சி, வாழ்க்கை, சேர்க்கை, இன்சொல், இறக்குமதி, கொலை, ஆற்றல், மறதி, வரவு, நடப்பு, விளையாட்டு, ஓரால், பொறை, கண்ணோட்டம், செல்லாமை, என்றல், மகிழ்ச்சி, குற்றம், இழுக்கம், ஒழுக்கம், விடல், தெளித்தல், பணிதல்

**எதிர்மறைத் தொழிற்பெயர்** - நீங்காமை

| **தொழிற்பெயர்** | **முதனிலைத் தொழிற்பெயர் முதனிலைத்** | **திரிந்த தொழிற்பெயர்** |
|---|---|---|
| படுதல் | படு | பாடு |
| பெறுதல் | பெறு | பேறு |
| விடுதல் | விடு | வீடு |
| சுடுதல் | சுடு | சூடு |
| கெடுதல் | கெடு | கேடு |

**பொதுப்பெயர்** (தான், தாம், எல்லாம்):
நான் தான் பேசினேன் - தான்
நீ தான் அழைத்தாய் - தன்மை, முன்னிலை
அவன் தான் அடித்தான்- படர்க்கை ஆகிய 3 இடங்கள்
மயில் தான் ஆடியது - இருதிணையிலும் பொதுவாக
செல்வன் தான் எழுதினான - ஒருமையில் வந்தது
மக்கள் தாம் போராடினர் -குதிரைகள் எல்லாம் ஓடின
(தாம், எல்லாம் என்பன இருதிணை மூவிடங்களிலும் பன்மை உணர்த்தின)

**ஆகுபெயர்**

பொருளாகு பெயர் - தாமரை முகம்
முதலாகு பெயர் - மல்லிகை மாலை (மலர்)
இடவாகு பெயர் - தேசம், ஊர் திரண்டது, உலகம் விழித்துக் கொண்டது
காலவாகு பெயர் - கார் அறுத்தார்
சினையாகு பெயர் - வெற்றிலை நட்டான்
பண்பாகு பெயர் - விருந்து வெள்ளை அடித்தான்
தொழிலாகு பெயர் - பொங்கல் உண்டேன்
தானியாகு பெயர் - பாலை இறக்கு, நாழி கழல் பணிந்தேன்
கருவியாகு பெயர் - யாழ்கேட்டு, குழல்கேட்டு
உவமையாகு பெயர் - காளை வந்தான், நாரதர் வருகிறார்
காரியவாகுபெயர் - நான் சமையல் கற்றேன், நீரின்றிப் பைங்கூழ் வாடியது, களவியல் படித்தான்
கருத்தா ஆகுபெயர் - திருவள்ளுவரைப்படித்துப்பார், திருவள்ளுவர் கற்றான்
சொல்லாகுபெயர் - வள்ளுவர் சொல், நூலுக்கு உரை கண்டான், பாட்டுக்கு உரை எழுதுக
எண்ணல் அளவை ஆகுபெயர் -ஒன்று பெற்றால் ஒளிமயம், பழம் ஒன்று கொடு
எடுத்தல் அளவை ஆகுபெயர் - கிலோ என்ன விலை?
முகத்தல் அளவை ஆகுபெயர் - நான்கு லிட்டர் தேவை, இரண்ட லிட்டர் கொடு
நீட்டல் அளவை ஆகுபெயர் - உடுப்பது நான்கு முழம், இரண்டு மீட்டர் வேண்டும்

**பெயர்ச்சொல்**

**இடுகுறிப்பெயர் -** மண், மலை, மடு, கல்

**காரணப்பெயர் -** வயிறு, சுவர்(சவல், தோள்), மரம்(தரையில் மருவி இருப்பது), கும்மி(குழுமியடித்தல்), குறிஞ்சி(மலைப்பகுதி ஊர்)

**காரண இடுகுறிப்பெயர் -** காற்றாடி, பட்டம், நாற்காலி

| பொருட்பெயர்- | **உயர்திணை** | **அஃறிணை** |
|---|---|---|
| | அரசன் | பசு |
| | தொண்டன் | குரங்கு |
| | கண்ணன் | சேவல் |
| | ராதா | நரி |
| | குமரன் | மேசை |

**இடப்பெயர் –** பள்ளி, சேலம், மதுரை, கல்லூரி, ஊர், திருச்சி

**காலப்பெயர் –** பகல், தை, இரவு, செவ்வாய்கிழமை, யாமம், நள்ளிரவு

**சினைப்பெயர்** - கை, தண்டு, பழம், கால், வேர், பல்

**குடிப்பெயர்** - குறவன், ஆயன், மறவன், பரதவன், அந்தணன், உழவன், வாணிபன்

**கிளைப்பெயர் –** அண்ணன், மாமி, நாத்தனார், மனைவி

**அளவைப்பெயர் –** பத்து, ஆழாக்கு, வீசை, கழஞ்சு, படி, கிராம், கிலோகிராம், மீட்டர்

**சுட்டுப்பெயர்** - அவன், அது, இவன், அங்கே, அவள், உவன், இது

**வினாப்பெயர் –** எவன், யாது, யார், எது, எவை, யாவள், எவர், யாவர்

**தொகுதிப்பெயர் –**

சேனை – பல வீரர் அடங்கியது
குழு - பல மக்கள் அடங்கியது
மாலை – பல மலர்கள் அடங்கியது
அடிசில் - உண்பன தின்பனவற்றைக் குறிப்பது

சொல்லுதல் - தொழிற்பெயர்
ஆண்மை - பண்புப்பெயர்
வாழ்க்கை – தொழிற்பெயர்
சிறகு - சினைப்பெயர்
உண்ணுதல் - தொழிற்பெயர்
உலகம் மகிழ்ந்தது - இடவாகுபெயர்
சிங்கம் - பொருட்பெயர்

**வேர்ச்சொல்லைக் கண்டறிதல்**

- கொடுக்கப்பட்ட சொல்லின் பொருள் மாறாத 'பகுதி'
- கட்டளைப் பொருளிலும் அமைய வேண்டும்.

**பகுபதம், பகாபதம்**

சொற்கள், பகுபதம், பகாபதம் என இருவகைப்படும்.

**பகாபதம் என்பது பிரிக்க முடியாத தனிச் சொல்**
- கல், படி, மண் செல்
**பகுபதம் என்பது பிரிக்கக்கூடிய கூட்டுச் சொல்**
- நடந்தான், பார்த்தல், கண்டேன்

**பகுபதத்தின் உறுப்புகள்**

**1. பகுதி:** சொல்லின் முதல் நிலையாக இருப்பது. வினைச்சொல்லில் கருத்தாவின் செயலைக் குறிப்பது.
**2. விகுதி:** சொல்லின் கடைசியாக இருப்பது. வினைச்சொல்லின் விகுதிகள் திணை, பால், எண், இடம் ஆகியவற்றைக் காட்டும்.
**3. இடைநிலை:** பகுதிக்கும், விகுதிக்கும் இடையில் நிற்பது இடைநிலை எனப்படும். அது பெயரிடைநிலை, வினையிடைநிலை என இருவகைப்படும். வினையிடைநிலைகள் காலத்தைக் காட்டும்.
**4. சாரியை:** விகுதிக்கும் இடைநிலைக்கும் இடையே வரும் இணைப்புச்சொல்லே சாரியை. விகுதியைச் சார்ந்து வருவதால் சாரியை என பெயர் பெற்றது.
**5. சந்தி:** பகுதியும், இடைநிலையும் சேரும்போது தோன்றல், திரிதல், கெடுதல் என்ற விதிப்படி வரும் எழுத்துகளே சந்தி.
**6. விகாரம்:** பகுதியும், இடைநிலையும் சந்திக்கும்போது ஏற்படும் மாற்றம் விகாரம் எனப்படும். (விகாரம் - மாற்றம்) பகுதியிலும், இடைநிலையிலும், சந்தியிலும் ஏற்படும்.

**சில சொற்களின் பகுபத உறுப்பிலக்கணம்**

**1. நடந்தனன் - நட+த் + த் + அன்+ அன்**
நட – பகுதி, த் - சந்தி (அது 'ந்' ஆக மாறியது விகாரம்)
த் - இறந்தகால இடைநிலை
அன் - சாரியை, அன் - விகுதி

**2. தந்தேன் - தா+த்+ த் + ஏன்**
தா – பகுதி, த் - சந்தி, (அது 'ந்' ஆக மாறியது விகாரம்)
த் - இறந்தகால - இடைநிலை,
ஏன் - தன்னை ஒருமை வினைமுற்று விகுதி.

**3. தொடேன் - தொடு+ ஆ+ ஏன்**
தொடு – பகுதி, ஆ – எதிர்மறை இடைநிலை, (இடைநிலை புணர்ந்து கெட்டது) ஏன் - தன்மை வினைமுற்று விகுதி

**4. நல்கிய – நல்கு+ய் + இன் + அ**
நல்கு – பகுதி, ய் - சந்தி,
இன் - இடைநிலை ('ன்','ய்' ஆனது விகாரம்)
அ – பெயரெச்ச விகுதி

**5. இறைஞ்சிய - இறைஞ்சு+ இன் +ய் + அ**
இறைஞ்சு – பகுதி, இன் - இறந்தகால இடைநிலை
ய் - உடம்படுமெய் ('ன்','ய்' ஆனது விகாரம்)
அ – பெயரெச்ச விகுதி.

**6. நின்மே – நில் + ம் + ஏ**
நில் - பகுதி, ம் - எழுத்துப்பேறு, ஏ – முன்னிலை விகுதி
குறிப்பு: எழுத்துப்பேறு என்பது ஆறு பகுபத உறுப்புகளில் அடங்காத உபரி எழுத்து.

**7. வெளவினான் - வெள+ வ்+ இன் + ஆன்**

வெள-பகுதி, வ் - சந்தி, இன் - இடைநிலை, ஆன் - விகுதி.

**8. வாழ்கிலேன் - வாழ் + க் + இல் +ஏன்**

வாழ் - பகுதி, க் - சந்தி, இல் - எதிர்மறை இடைநிலை, ஏன் - விகுதி.

**உவமையால் விளக்கப்பெறும் பொருத்தமான பொருள்**

அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல — பொறுமை
நன்பால் கலந்தீமையால்திரிதல் போல — கெடுதல்
மரப்பாவை நாணால் உயிர்மருட்டல் போல — மயங்குதல்
அடுத்தது காட்டும் பளிங்குபோல் — வெளிப்படுத்தல்
அத்தி பூத்தாற்போல — அரிய செயல்
அடியற்ற மரம்போல — வீழ்தல்
இலவு காத்த கிளிபோல — ஏமாற்றம்
உடலும் உயிரும்போல — ஒற்றுமை, நெருக்கம்
கடல்மடை திறந்தாற்போல — வெளியேறுதல்
பகலவனைக் கண்ட பனிபோல — நீங்குதல்
உள்ளங்கை நெல்லிக்கனி போல் — தெளிவு
தாமரையிலைத் தண்ணீர் போல — பற்றின்மை
பேடிகை வாளாண்மை போலக்கெடும் — முயற்சியின்மை
ஒற்கத்தின் ஊற்றாம் துணை போல — ஊன்றுகோல்
பொருபுலி புலியோடு சிலைத்தபோல் — எதிரெதிரே நின்றுபோரிடல்
கடலில் கரைத்த காயம் போல — பயனற்றது
கொடுக்குத் தேளாய்க் கொட்டுவதேன் — வருத்தம்
இடியோசை கேட்ட நாகம் போல — நடுக்கம்
செந்தமிழும் சுவையும் போல — ஒற்றுமை
தாயைக் கண்ட சேயைப் போல — இன்பம், அதிக மகிழ்ச்சி
நகமும் சதையும் போல — இணை பிரியாமை
மழை காணாப் பயிர்போல — வாடுதல்
வேலியே பயிரை மேய்ந்தது போல — நயவஞ்சகம்
அன்றலர்ந்த மலர் போல — புத்துணர்வு
அழலில் விழுந்த புழுப்போல — வேதனை
கண்கட்டு வித்தை போல — மாயத்தேரை
பத்தரை மாற்றுத்தங்கம் போல — பெருமை
நாயும் பூனையும் போல — பகை
அலை ஓய்ந்த கடல் போல — அமைதி
பசுமரத்தாணி போல — எளிதாகப் பதிதல்
குன்றின் மேலிட்ட விளக்குபோல — பயனுடைமை, பயன்
கனியிருப்பக் காய் கவர்ந்தது போல — அறியாமை,தேவையற்ற செயல்
இலைமறைக் காய் போல — வெளிப்படுதல்
ஆலையில் அகப்பட்ட துரும்புபோல — துன்பம்
குரங்கு கையில அகப்பட்ட பூமாலை போல — நாசம்
செவிடன் காதில் ஊதிய சங்கு போல — பயனின்மை
செந்தமிழும் சுவையும் போல — ஒற்றுமை
ஞாயிறு கண்ட தாமரை போல — மகிழ்ச்சி
நீர்மேல் எழுத்துபோல — நிலையற்றது
பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல — இன்பமிகுதி
வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது போல — வருத்தம்
அனலிற் பட்ட மெழுகுபோல — துன்பம் கண்டு உருகுதல்
குளிக்கப்போய் சேற்றைப் பூசிக்கொண்டு வருவது போல் — குறும்புகளில் ஈடுபடுவது.
பொன்மலர் மணம் பெற்றது போல் — பொருட்செல்வர் அறிவுச் செல்வத்தால் தேடிக்கொள்வது
உமி குற்றிக் கை சலித்தது போல — வருத்தம்
கண்ணிலாதான் கண் பெற்றுஇழந்தது போல — குவிப்பு
கறையான் புற்றெடுக்கக் கருநாகம் குடி புகுந்தது போல — அத்துமீறல்
அச்சில் வார்த்தாற்போல — ஒரே சீராக
அவலை நினைத்து உரலை இடித்தாற்போல — கவனம்
ஆப்பறைந்த மரம்போல — உறுதி
அழுத பிள்ளைக்கு வாழைப்பழம் போல — ஏமாற்றுதல்
அரை கிணறு தாண்டியவன் போல — ஆபத்து
ஆப்பசைத்த குரங்குபோல — வேதனையில்
ஆழம் தெரியாமல் காலைவிட்டதுபோல — திட்டமிடாமை
இஞ்சி தின்ற குரங்குபோல — விழித்தல்
இடி விழுந்த மரம்போல — வேதனை
இரும்பைக் கண்ட காந்தம் போல — கவர்ச்சி
உடும்புப் பிடி போல — பிடிப்பு
உமையும் சிவனும் போல — நட்பு, நெருக்கம்
உச்சந்தலையில் ஆணி அறைந்ததுபோல — உறுதி
ஊமை கண்ட கனவு போல — தவிப்பு, கூற இயலாமை
எள்ளில் எண்ணெய் போல — ஒளிந்திருத்தல், மறைவு
எட்டாப்பழம் புளித்தது போல — ஏமாற்றம்
ஏழை பெற்ற செல்வம் போல — மகிழ்ச்சி
ஒண்ட வந்த பிடாரி ஊர்ப்பிடாரியை ஒட்டினாற்போல — விரட்டுதல்
நமஸ்காரம் போல — காலம் தாமதித்து உணர்தல், வருமுன் காவாமை
கயிறற்ற பட்டம் போல — தவித்தல், வேதனை
கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைத்தது போல — பிறரை ஏமாற்றுதல்
கண்ணைக் கட்டி காட்டில் விட்டது போல — துன்பம், வேதனை
கடன்பட்டார் நெஞ்சம் போல — கலக்கம், வருத்தம்
கான மயிலாட அது கண்டு ஆடும்வான்கோழி போல — தாழ்வு, உயர்வின்மை
குடத்தில் இட்ட விளக்கு போல — இகழ்ச்சி
சிதறிய முத்து போல — பயனின்மை
காய்ந்த மாடு கம்பங்கொல்லையில்மேய்ந்தாற்போல — வேகம்
சீரிய நாகம் போல — கோபம்
செல்லரித்த ஓலை போல — பயனின்மை
நீரும் நெருப்பும் போல — விலகுதல்
பாம்பின் வாய்த் தேரை போல — மீளாமை
முக்காலம் உணர்ந்த முனிவர் போல — அறிதல்
பாய்மரம் சாய்ந்தது போல — விழுதல்
மரமேற்றின வண்டி போல — சுமை
பால் மணம் ஆறாத குழந்தை போல — வெகுளி
புளியம் பழமும் தோடும் போல — ஒற்றுமை
புற்றீசல் போல — பெருகுதல்
மலரும் மணமும் போல — ஒற்றுமை
வேம்பும் அரசும போல — ஒற்றுமை
மேகம் கண்ட மயில் போல — மகிழ்ச்சி, ஆனந்தம்
காட்டுத்தீ போல — வேகம் பரவுதல்
பற்று மரமில்லாக் கொடி போல — ஆதரவின்மை, துன்பம்
கோலை எடுத்தால் குரங்கு ஆடுவது போல — பயம்
சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தாற்போல — இன்பம், அதிக இன்பம்
சாயம் போன சேலை போல — மதிப்பின்மை
சித்திரப் பதுமை போல — அழகு
சிவ பூஜையில் கரடி போல — விருப்பமின்மை, தேவையற்ற வரவு
சும்மா கிடந்த சங்கை ஊதிக்கெடுத்தல் போல — வேண்டாத வேலை கேடு செய்தல்
சேற்றில் பிறந்த செந்தாமரை போல — உயர்வு, மேன்மை
சொன்னது சொல்லும் கிளப்பிள்ளை போல — திரும்பச் செய்தல் அறிவின்மை
திருடனைத் தேள் கொட்டியது போல — சொல்ல முடியாத வேதனை
தோன்றி மறையும் வானவில்லைப் போல — நிலையற்ற, நிலையாமை
நத்தைக்குள் முத்துப்போல — உயர்வு, மேன்மை
நாண் அறுந்த வில் போல — பயனற்றது
தொட்டனைத் தூறும்மணற்கேணி போல் — அறிவு
நீருக்குள் பாசி போல — நட்பு
பசுந்தோல் போர்த்திய புலி போல — நயவஞ்சகம், ஏமாற்றுதல்
தாயைப்போல பிள்ளை — தொடர்பு

தமிழுக்கும் அமுதென்றுபேர் – அந்தத்
தமிழ் இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்! *

தமிழுக்கு நிலவென்று பேர் – இன்பத்
தமிழ் எங்கள் சமூகத்தின் விளைவுக்கு நீர்! *

தமிழுக்கு மணமென்று பேர் – இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்! *

தமிழ் எங்கள் இளமைக்குப் பால் – இன்பத்
தமிழ் நல்ல புகழ்மிக்க புலவர்க்கு வேல்!

தமிழ் எங்கள் உயர்வுக்கு வான் – இன்பத்
தமிழ் எங்கள் அசதிக்குச் சுடர்தந்த தேன்!

தமிழ் எங்கள் அறிவுக்குத் தோள் – இன்பத்
தமிழ் எங்கள் கவிதைக்கு வயிரத்தின் வாள்!

– பாரதிதாசன்

தமிழே உயிரே வணக்கம்
தாய்பிள்ளை உறவம்மா, உனக்கும் எனக்கும்
அமிழ்தே நீ இல்லை என்றால்
அத்தனையும் வாழ்வில் கசக்கும் புளிக்கும்
தமிழே உன்னை நினைக்கும்
தமிழன் என் நெஞ்சம் இனிக்கும் இனிக்கும்

– கவிஞர் காசி ஆனந்தன்



கொட்டுங்கடி கும்மி கொட்டுங்கடி, இளங்
கோதையரே கும்மி கொட்டுங்கடி – நிலம்
எட்டுத் திசையிலும் செந்தமிழின் புகழ்
எட்டிடவே கும்மி கொட்டுங்கடி!

ஊழி பலநூறு கண்டதுவாம், அறிவு
ஊற்றெனும் நூல்பல கொண்டதுவாம் – பெரும்
ஆழிப் பெருக்கிற்கும் காலத்திற்கும் முற்றும்
அழியாமலே நிலை நின்றதுவாம்!

பொய் அகற்றும்: உள்ளப் பூட்டறுக்கும் – அன்பு
பூண்டவரின் இன்பப் பாட்டிருக்கும் – உயிர்
மெய்புகட்டும்; அறமேன்மை கிட்டும்; இந்த
மேதினி வாழ்வழி காட்டிருக்கும் !

– பெருஞ்சித்திரனார்

வான்தோன்றி, வளி தோன்றி, நெருப்புத் தோன்றி
மண் தோன்றி, மழை தோன்றி, மலைகள் தோன்றி
ஊன் தோன்றி, உயிர் தோன்றி, உணர்வு தோன்றி,
ஒளி தோன்றி, ஒலி தோன்றி, வாழ்ந்த அந்நாள்
தேன் தோன்றியது போல மக்கள் நாவில்
செந்தமிழே! நீ தோன்றி வளர்ந்தாய்! வாழி!

– வாணிதாசன்

